# கல்கி

ஸ்வீட்டா...ஸ்லைட்டா...ஸ்மார்ட்டா...




KALKI • 05.04.2009 • ரூ.10:00 • 96 பக்கங்கள்



குமரி மருமகள்!



குளறுபடி மகன்!

போலீஸ் குவார்ட்டர்ஸில்

| | |
|---|---|
| குமரி மருமகள் | 04 |
| ரெயின்போ கலாட்டா | 08 |
| போலீஸ் குவார்ட்டர்ஸில் குல்மொஹர் | 88 |
| குளறுபடி மகன் | 96 |


கலக்க வருது கல்கி!

திருவாரூர், நாகை மாவட்ட வாசகர்களுக்கு நடுப்பக்கத்தில் கூப்பன்!

# கல்கி






05.04.2009

# உடையழகு... நடையழகு...



ஒரு பெண்ணின் வார்ட்ரோபில் ஜீன்ஸ், டாப்ஸ், ஸ்கர்ட்ஸ், குர்தீஸ் எவ்வளவு இருக்குமோ அதற்குக் கொஞ்சமும் குறையாமல் காலணிகளும் இருக்கும்! அணிந்ததும் காலடியில் சிறகுகள் முளைத்ததைப் போல் பரவசமாக இருக்கும்.

இன்று இளம்பெண்களிடையே பயங்கர ஹிட்டாகியிருக்கும் ஒருசில வெரைட்டிகளைப் பார்ப்போம்...

# காலடியில் சிறகுகள்!



ஃபிலிப் ஃப்ளாப்ஸ் (Flip Flops): பெயரில் ஃப்ளாப் இருந்தாலும் செம ஹிட்டான ஸ்டைல் செருப்பு. இதைப் போடாத, விரும்பாத பெண்களே கிடையாது. படு காஷுவல் லுக், கம்ஃபர்டபிள், ஸ்டைல்... எனப் பல சௌகர்யங்கள்! ரப்பர், வினைல், ஃபோம் என பல மெட்டீரியல்களில் கிடைக்கும் ஃபிலிப் ஃப்ளாப் செருப்புகள், அதிகமாக ஃப்ளாட்டாக இருக்கும். ஹைஹீல்ஸில் வராது. காஸ்ட்லியும் கிடையாது. ஜீன்ஸ், காஷுவல் ஷார்ட்ஸ் போன்ற உடைகளுடன் ஃபிலிப் ஃப்ளாப் சப்பல்கள் படுகிளாமராகத் தெரியும். பல கலர்களில் வரும் இந்தக் காலணிகளில் லேட்டஸ்ட் புரட்சி ஒவ்வொரு காலுக்கும் ஒவ்வொரு கலர். பிங்க்-வொயிட், பிங்க்-ப்ளூ, ப்ளாக்-வொயிட்... என காண்ட்ராஸ்டாக வருகிறது. அவசரத்தில் சப்பலை மாத்திப் போட்டுட்டு வந்துட்டேன்... என முழிக்கவே வேண்டாம்.

★ பீப் டோஸ் (Peep toes): இன்று கல்லூரி மாணவிகளிடையே பயங்கர க்ரேஸ்! ஸ்டைல், கிளாமர், செக்ஸி லுக் வேண்டுமென்று நினைக்கும் பெண்கள் வாங்குவது பீப் டோஸ் காலணிகளை! இந்தச் செருப்பின் விசேஷம் என்னவென்றால், ஒரு சில விரல்கள் வெளியில் எட்டிப் பார்க்கும். "நெயில் ஆர்ட் பண்ணியிருக்கோமுல்ல, வெளியில தெரிஞ்சாதானே பார்வையாயிருக்கும்..." என பெண்கள் அழகா சலிக்கக்கிறாங்க! கோல்ட், சில்வர்,

பீச், ப்ளூ போன்ற கலர்களில் வரும் பீப் டோஸ்கள் கடை ஷெல்ஃபிலேயே இருப்பதில்லை. உடனே சேல்தான்!

ப்ரைட் கலர்களில் போடவும். அதுதான் 'இன் திங்'. அனிமல் பிரின்ட்ஸ், மல்டி கலர்ட், புள்ளிகள், மெட்டாலிக் கலர்ஸ்... என ஏகப்பட்ட சாய்ஸ்! பீப் டோஸ் பொதுவாக வெஸ்டர்ன் உடைகளுடன் - லெகிங்ஸ், பான்ட், ஸ்கர்ட்டுடன் - சூப்பராக இருக்கும்.

★ **கோலாபுரி:** மரத்தடியில் தாடியும் மீசையுமாக உட்கார்ந்திருக்கும் சாமியார்களிலிருந்து, கேட்வாக் செய்யும் மாடல்கள் வரை அனைவரையும் கவர்ந்தவை கோலாப்பூர் செப்பல்கள். ட்ரெடிஷனல்+ட்ரெண்டி! கிட்டத்தட்ட நானூறு வருடங்களாக இருக்கும் இந்தப் புராதன சப்பல்களுக்கு மயங்காத பெண்களே கிடையாது. மகாராஷ்டிர மாநிலத்திலிருக்கும் கோல்ஹாபூர் டவுனிலிருந்து தயாராகும் இந்தச் செருப்புகள், வெளிநாடுகளிலும் விரும்பிப் பயன்படுத்தப்படுகின்றன. மடோனாவின் ஃபேவரிட் கோலாபுரி சப்பல்களாம். ப்யூர் லெதர் செருப்புகளான கோலாபுரியில் ஒரு இரும்பு ஆணி கூட அடிக்கப்படுவதில்லை என்பது ஸ்பெஷல்! டெய்லி வியர் கோலாப்புரியின் ஸ்டைலே அதன் ரியல் கலர்கள்தான். நாச்சுரலாக இருக்கும் தோல் செருப்பில் லேசாக ஜரிகை, எம்பிராய்டரி என வேலைப்பாட்டுடனும் கிடைக்கிறது. எந்த வயதினருக்கும், எந்த அகேஷனுக்கும் பொருந்தி விடும். சுடிதார், குர்தீஸ், ஸ்கர்ட்... என எந்தவித ஆடையுடனும் போடலாம். ஜீன்ஸ், கேப்ரீஸுடன் போடவே கூடாது.

**சப்பலை மாத்திப் போட்டுட்டு வந்துட்டேன்... என முழிக்கவே வேண்டாம்.**

**- லதா சேகர்**




**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: **சீதா ரவி**

உதவி ஆசிரியர்: **கதிர்பாரதி**

வடிவமைப்பு:
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன், பா.கோபால்**

தொலைபேசி:
044 - 4343 8888 (30 lines)
தொலைநகல்: 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள்:
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி:
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-
வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : ரூ. 3,800/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

மற்ற கட்சிகள் கூட்டணி அமைப்பதிலும் தொகுதி உடன்பாடு செய்வதிலும் பிஸியாக இருக்க, தனியே களத்தில் நிற்கிறது பகுஜன் சமாஜ் கட்சி. அதன் சார்பாக கன்னியாகுமரி தொகுதியில் போட்டியிடுகிறார் முன்னாள் ஐ.ஏ.எஸ். அதிகாரி சிவகாமி. முதன்முறையாக தேர்தலைச் சந்திக்கும் சிவகாமி, மார்ச் முதல் வாரத்திலேயே பிரசாரத்தைத் துவங்கி, பாதிக்கும் மேற்பட்ட கிராமங்களை 'கவர்' செய்துவிட்டார்.

## கன்னியாகுமரி ஏன்?

கல்வி அறிவு நிரம்பப் பெற்ற குமரி மக்கள் அரசியல் கவர்ச்சிகளையும், வெற்று கோஷங்களையும் புறக்கணித்து மக்களுக்குத் தொண்டாற்றும் உண்மையான அரசியல்வாதிகளை அடையாளம் காண்பார்கள் என்ற நம்பிக்கையுடன் இங்கு போட்டியிடுகிறேன். நான் பிறந்த மாவட்டம் பெரம்பலூர் என்றாலும், என் கணவரின் கிராமமான கற்காடு இந்தத் தொகுதியில் தான் இருக்கிறது.

## மாயாவதியைத் தெரிகிறதா?

பத்திரிகைகளும் தொலைக்காட்சிகளும் பகுஜன் சமாஜ் கட்சியையும் மாயாவதியையும் எல்லா கிராமங்களுக்கும் கொண்டு சேர்த்திருக்கின்றன. பல கிராமங்களில் படித்த இளைஞர்கள், உத்திரப்பிரதேசத்தில் அவர் செயல்படுத்தி இருக்கும் திட்டங்களைப் பற்றி ஆர்வத்துடன் கேட்கிறார்கள். தாழ்த்தப்பட்ட மக்களின் ஆதரவுத் தளத்திலிருந்து புறப்பட்ட மாயாவதி, அனைத்து மக்களின் - குறிப்பாக வறுமைக் கோட்டுக்கு உட்பட்ட மக்களின் - தலைவியாக உருவெடுத்து வருவது மக்களுக்கு நன்றாகவே தெரிகிறது. குமரி மக்களை மதவெறிக்குத் தள்ளும் ஆபத்தான போக்கும் காணப்படுகிறது. இந்நிலையில் அனைத்துப் பிரிவினருக்கும் தலைவியாக மாயாவதி வளர்ந்து வருவதையும் பிரதமர்



**அனைத்துப் பிரிவினருக்கும் தலைவியாக மாயாவதி வளர்ந்து வருவதையும் பிரதமர் பதவிக்கு அவரே தகுதியானவர் என்பதையும் சொல்லும் வாய்ப்பு கிடைத்திருக்கிறது.**

பதவிக்கு அவரே தகுதியானவர் என்பதை யும் சொல்லும் வாய்ப்பு கிடைத் திருக்கிறது. மேலும் அருகிலுள்ள திருவனந்தபுரத்தில் பிரபல அரசி யல்வாதியான நீல லோகிதாசன் நாடார் பி.எஸ்.பி.யின் வேட் பாளராகப் போட்டியிடுகிறார். எனவே பி.எஸ்.பி. கட்சியையும் அதன் யானை சின்னத்தையும் மக்கள் பரவலாக அறிந்து வைத்திருக்கிறார்கள்.

### போலீஸ் ஸ்டேஷனுக்குப் போவதுதான் வேலையா?

பக்கத்து வீட்டுக்காரருடன் தகராறு என்றால் போலீஸ் ஸ்டேஷனுக்கு எம்.பி. வரவேண்டும்; நிலப் பிரச்னை, கடன் பிரச்னை என்றால் கட்டப் பஞ்சாயத்து செய்ய வேண்டும்; வேலை வாய்ப் பைத் தரவேண்டும்; மாற்றல் வாங்கித் தரவேண்டும்; தெரு சாக்கடை அடைத்துக் கொண்டால் சரி செய்து தரவேண்டும் என்றெல்லாம்

# அன்போடு தரும் அம்பது - நூறு!

## - களத்தில் குமரி மருமகள் சிவகாமி

மக்கள் எம்.பி.யிடம் எதிர்பார்க்கிறார்கள். படித்த மக்கள் கொண்ட இந்தத் தொகுதி யிலேயே இதுபோன்ற கருத்துக்கள் இருக் கின்றன. எனவே, ஒரு எம்.பி.யின் கடமை என்ன என்பதை விளக்கிச் சொல்ல வேண்டிய அவசியம் இருக்கிறது. கொள்கை சம்பந்தப்பட்ட விவகாரங்களில் செயல்பட்டு தொகுதியின் ஒட்டுமொத்த முன்னேற்றத்துக்குப் பாடு படுவதே ஒரு எம்.பி.யின் கடமை என்ப தைச் சொல்லி வருகிறேன்.

### என்ன செய்யப் போகிறார்?

படித்த பட்டதாரி இளைஞர்கள் வேலை இல்லாமல் அதிக அளவில் இருக்கும் தொகுதி. எனவே வேலை வாய்ப்புப் பயிற்சி மையங்கள் அமைப்

## “இலவசங்களைவிட தொலைநோக்குக் கண்ணோட்டத்துடன் ஆள்வோர் செயல்படுவதையே மக்கள் விரும்புகிறார்கள்.”



பேன் என்று சொல்கிறேன். இது தவிர, ரப்பர் தொழிற்சாலைகள், மீன்பிடித் துறை முகங்கள் அமைத்து மக்களுக்கு வேலை வாய்ப்பையும் பொருளாதார ஏற்றத்தையும் கொண்டு வருவேன் என்றும் சொல்கிறேன்.

### மக்களின் ரீ - ஆக்‌ஷன்

ஐ.ஏ.எஸ். பதவியைத் தூக்கி எறிந்துவிட்டு பொதுச் சேவையில் குதித்துள்ள என்னை மக்கள் ஆர்வத்துடன் வரவேற்கிறார்கள். சுயநலக் கலப்பு இல்லாமல் செயல்படுவேன் என்று நம்புகிறார்கள். பிரசாரத்தின் போது என்னைத் தடுத்து நிறுத்தி, அன்போடு ஐம்பது, நூறு என தேர்தல் நிதி கொடுக்கிறார்கள். எவ்வித ஆர்ப்பாட்டமும் இல்லாமல் நான் செய்யும் பிரசாரம் அவர்களுக்குப் பிடித்திருக்கிறது. தேர்தலில் பணத்தின் ஆதிக்கத்தால் நல்லவர்கள் தோற்கடிக்கப்பட வேண்டுமா என்ற கேள்வியை அவர்கள் முன் வைக்கிறேன்.

### உள்ளூர் விவகாரங்கள்

மக்களை இன்னமும் மேம்படுத்தப்பட்ட தளத்துக்கு அழைத்துச் செல்ல விரும்புவதால் தமிழ்நாட்டுப் பிரச்னைகளைப் பற்றி நான் அதிகம் பேசுவதில்லை. ஆனால், திராவிடக் கட்சிகள் ஐந்து ஐந்து வருடங்கள் மாறி மாறி ஆட்சி செய்து, மக்களை ஏமாற்றி வருவதை, சுரண்டி வருவதைப் பற்றி வெறுப்புடன் பேசுகிறார்கள். இலவசங்களைவிட, தொலைநோக்குக் கண்ணோட்டத்துடன் ஆள்வோர் செயல்படுவதையே மக்கள் விரும்புகிறார்கள். நல்ல மாற்று இல்லை என்ற வருத்தமும் அவர்களிடம் இருக்கிறது.

**- ப்ரியன்**

### இரு துளிகள்...

லக்னோவில் ஏப்ரல் 7 முதல் 13-ந் தேதி வரை நடைபெறவுள்ள சி.எம்.எஸ். சர்வதேச குழந்தைகள் திரைப்பட விழாவில் திரையிட, நடிகர் பாண்டியராஜனின் 'இரு துளிகள்' என்ற குறும்படம் 'உலக சினிமா' என்னும் பிரிவில் தேர்வு செய்யப்பட்டுள்ளது. இப்படத்தில் பாண்டியராஜனுடன் அஸ்வின் குமார் என்ற சிறுவன் நடித்திருக்கிறான். போலியோ நோய்க்கு நிரந்தர முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்பதை மையமாகக் கொண்ட குறுஞ்சித்திரம் இது.

கதை, திரைக்கதை, வசனம், இயக்கம் ஆர்.பாண்டியராஜன். இசை ஸ்ரீகாந்த் தேவா. நித்யா ஒளிப்பதிவில், பிலிம் டுடே நிறுவனம் இப்படத்தைத் தயாரித்துள்ளது.



# உங்களின் பெருமைக்குரிய பங்களிப்பு.

## நாட்டின் பொருளாதார மற்றும் சிறுதொழில் வளர்ச்சியில்.



வாழ்வும், வளமும் உங்கள் கைகளிலே. சேமிப்பவர், கடன் வேண்டுபவர் யாராக இருப்பினும், அவர்களின் ஒரே தேர்வு சீட்டுத் திட்டம் தான். சேமிக்கும் தொகை, காலம், டிவிடென்ட் அனைத்தும் அதன் சந்தாதாரர்களாலேயே தீர்மானிக்கப்படுகிறது. மாதந்தோறும் சேமிக்கவும், கடன் பெறவும் வகை செய்யும் பாதுகாப்பான இருவழித் திட்டம்.

**வளமைக்கு வழிகாட்டி.**

ஸ்ரீராம் சிட்ஸ் ரூ.30,000 கோடிக்கு மேல் சீட்டு தொகை பட்டுவாடா செய்து 35 வருடங்களில் 40 இலட்சத்திற்கும் அதிகமான குடும்பங்களின் வாழ்வை வளமாக்கியுள்ளது.

**நாட்டின் வளர்ச்சியில் உங்களின் பங்களிப்பு.**

ஸ்ரீராம் நிறுவனங்கள் பல்வேறு நிதித் திட்டங்களின் மூலம் பெரிய தொழில் முதல் சிறுதொழில் புரிபவர்கள் வரை அவரவர் தேவைகேற்ப, கால விரையமின்றி குறைந்த ஆவணங்களில் பொருளாதார ஆதரவும், ஊக்கமும் அளித்து வருகின்றன. இதன் மூலம் உங்களின் நிதி, நாட்டின் பொருளாதார மற்றும் சிறுதொழில் வளர்ச்சிக்கு பெரும் பங்களிப்பை அளிக்கின்றன.

**சித்திரை சீட்டு விழா!**

ரூ.50,000 முதல் ரூ.10 இலட்சம் வரை மதிப்புள்ள ஸ்ரீராம் சீட்டுத் திட்டங்களில் சேரும் சந்தாதாரருக்கு ரூ.1 இலட்சம் வரை ஆயுள் இன்சூரன்ஸ் வழங்கப்படும். மேலும் சந்தாதாரருக்கும், அவர் குறிப்பிடும் வாரிசு தாரருக்கும் ரூ.1.50 இலட்சம் வரைநபர் விபத்துக் காப்பீடு தனித்தனியே வழங்கப்படும். முதல் வருட காப்பீட்டு பிரீமியத்தை ஸ்ரீராம் சிட்ஸ் செலுத்தி விடும்*.

மேலும் விவரங்கள் அறிய அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.

*நிபந்தனைகளுக்குட்பட்டது

## ஸ்ரீராம் சிட்ஸ்

தமிழ்நாடு பிரைவேட் லிமிடெட்



கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 6 • போன்: 4223 6000 www.shriramchits.com



சித்திரை சீட்டு விழா

சேமிப்பு • கல்வி • திருமணம் • மருத்துவச் செலவு • வாகனக் கடன் • நவீனமயக் கடன்

தொழில் அபிவிருத்தி கடன் • வீட்டு உபயோக சாதனங்கள் • தங்க நகைக் கடன்

WORDCRAFT

‘கல்கி’யின் ‘காலேஜ் விசிட்’டின் போது ஸ்ரீகன்யகா பரமேஸ்வரி காலேஜின் குஷியாலஜி காலத்தில் நமக்குக் கிடைத்த ரெயின்போ கலாட்டாவின் யூத் டிப்ஸ் இது...

### ப்யூட்டி டிப்ஸ்

★ மஞ்சள், வாழைப்பழத்துடன் சிறிதளவு தேன் கலந்து அதனைக் குழைத்து முகத்தில் தடவி, இருபது நிமிடங்கள் கழித்துக் கழுவினால் முகம் பளிச்சென்றிருக்கும். இதனை வாரம் இருமுறை செய்ய வேண்டும்.

★ சோப்பில் சிறிதளவு சர்க்கரை சேர்த்து தொடர்ந்து முகத்தைக் கழுவி வந்தால் கல்கி படிக்கிற இந்த கல்கண்டு மாதிரி இருக்கும் என்கிறார் பி.காம் இரண்டாம் ஆண்டு படிக்கும் எம்.சி.ரேகா

(எறும்பு, ஈ மொய்க்காமல் இருக்கவும் ஏதாவது டிப்ஸ் சேர்த்துச் சொல்லியிருக்கலாம்!)

# ரெயின்போ கலாட்டா



''அவருக்குக் கோபம் வந்தா கண்ணுமண்ணு தெரியாது.''

''என்ன பண்ணுவார்?''

''தடுக்கி கீழே விழுந்திடுவார்.''

(ரொம்ப விழுந்து விழுந்து சிரிக்காதீங்க... அடிபடப் போகுது!)

- சீதா, பி.எஸ்ஸி முதலாமாண்டு





''இந்த வார கல்கியில் இருக்கிற ஜோக்குகளை ஜோரா வடிகட்டி, செலக்ட் பண்ணிக் கொடுத்தது நான்தாங்க!''

- சரண்யா

## அறிவிப்பு பலகை

நூலகத்தில் "சத்தம் செய்யாதீர்"
பூங்காவில் "பூக்களைப் பறிக்காதீர்"
சுவரில் "சுவரொட்டி ஒட்டாதீர்"
வாசற்கதவில் "நாய்கள் ஜாக்கிரதை"
வாசித்தேன் பின்பற்றினேன்...
நீயும் "இது பொது வழி அல்ல" என
உன் கண்களில் எழுதியிருந்தால்
பிழைத்திருப்பேன்
நீ மறந்ததால் நான் எழுதுகிறேன்
"அபாயம் தொடாதே"

அ. செல்வராணி,
இரண்டாம் ஆண்டு பி.காம்.,

(பெரிய அறிவிப்பாளரா வருவீங்க நீங்க...)





ஆமிஷா



***ஆசிரியர்:*** *வற்றாத ஆறு எது சொல்லு பார்ப்போம்.*
***மாணவன் :*** *வர'லாறு' சார்!*
***ஆசிரியர் :*** *!!!*



ஒரு மாதம் பிரத்யேகப் பயிற்சி எடுத்த பின், 130 மாணவிகளுக்கு சொல்லிக் கொடுக்கும் **ஷண்முக ப்ரியா,** இப்போது நகை வடிவமைப்பில் ஸ்பெஷலிஸ்ட். ''நான் நகைகளை டிசைன் செய்யவில்லை... கல்லூரிக்குள் நடமாடும் தேவதைகளைத்தான் வடிவமைக்கிறேன்'' என்கிறார்.

தொகுப்பு : அமிர்தா

**வா**னத்துக்குச் சில நாள் வளைகாப்பு
வானவில் தோன்றுகையில்!
என் வாழ்வு முழுக்க வளைகாப்பு
நீ கூடவே இருக்கையில்!
**(எப்படியோ... கலர்ஃபுல்லா இருந்தால் சரி!)**
**- பூங்கொடி பி.காம்., (இரண்டாம் ஆண்டு)**

# அசோக் சிங்காலின் அறிவுரை பற்றி..?



● தெரியாத 'நலங்கள்'!



● சிக்காத மீன்!

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

***? மக்களவை தேர்தல் களத்தின் புரட்சியாளர் என்று யாரைச் சொல்லலாம்?***

! மூன்றாவது அணியிலிருந்து வெளியேறும் முடிவை மூன்று நிமிடங்களில் எடுத்ததுடன், முந்திக் கொண்டு தமிழகத்தில் பிரசாரத்துக்கு வரவிருக்கும் மாயாவதி. ஆனால், அவருடைய இந்தப் புரட்சி, மக்களின் எழுச்சியாக மாறுவது சந்தேகம்தான்.

● மு.மதிவாணன், ஆரூர்

***? கடவுள் மனிதனைப் படைத்ததன் நோக்கம் என்னவாக இருக்கும் என்று எப்போதாவது யோசித்துப் பார்த்ததுண்டா?***

! ம்... மனிதன் கடவுள் நிலைக்கு உயர வேண்டும் என்பதற்காகத்தான்.

● என்.காளிதாஸ், சிதம்பரம்

***? பா.ஜ.க.வுடன் சேருவதுதான் விஜயகாந்துக்கு நல்லது என்கிறாரே இல.கணேசன்?***

! பல்வேறு கட்சிக்காரர்களும் எவ்வளவோ கஷ்டப்பட்டு வலை வீசிப் பார்த்தும் மீன் சிக்கலையே! நழுவிப்போச்சே! கெட்டிக்கார மீனுதான். பதவி ஆசையைக் காட்டிலும் நல்ல பேரெடுப்பதுதான் முக்கியம்னு நினைக்குது பாருங்க!

● பி.இராஜேந்திரன்,
லோயர் அணைக்கட்டு ❑

***? பிப்ரவரி 19 கோர்ட் ரகளையில் ஈடுபட்ட வக்கீல்களைப் பார்த்து, ''எங்களுக்கே பாதுகாப்பு இல்லாமல் போய் விடும் போலிருக்கிறதே'' என்று நீதிபதி கூறியதைத் தொடர்ந்துதான் போலீஸ் அதிகாரிகள் தடியடிக்கு உத்தரவிட்டார்கள். இப்போது அவர்களே சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனரே?***

! கலவரத்தை அடக்க போலீஸ் அதிகாரிகள், தேவையில்லாமலோ அல்லது தேவைக்கு அதிகமாகவோ வன்முறையைக் கையாண்டார்களா என்பதுதான் பிரச்னை. சஸ்பென்ஷன் என்பது பதவி நீக்கம் அல்ல;

விசாரணைக்கான முதல் படி. அதன் முடிவில் அவர்கள் மறு நியமனமாகலாம் அல்லது உரிய தண்டனை பெறலாம். வழக்கறிஞர்கள் மீதுள்ள வழக்குகளும் துரிதமாக விசாரிக்கப்பட வேண்டும். அப்போதுதான் மக்களுக்கு நீதிமன்றத்திடம் உள்ள மதிப்பு நிலைக்கும்.

● ஆர்.கே.ராஜன், சென்னை-41

**? கல்கி தற்போது மக்கள் பிரச்னைகளில் (கிராமப்புற) அதிகம் கவனம் செலுத்துவது போல் தெரியவில்லையே? மக்களுக்குப் பிரச்னைகளே இல்லையா?**

! மதுரை ஸ்பெஷலில் மல்லிகை மட்டுமா மணக்கிறது? மக்களின் கவலைகளும் கனக்கின்றன; கவனியும். அடுத்து கோவை ஸ்பெஷலையும் படித்துப் பார்க்கவும்.

● கே.தெய்வசிகாமணி, சென்னை-82

**? சிதம்பரம் நடராஜர் கோயில் உண்டியலில் யாரோ சில விஷமிகள், நெய்-எண்ணெய் பாக்கெட்டுகளைப் போட்டு, உள்ளேயிருந்த ரூபாய் நோட்டுகளைப் பாழாக்கியிருக்கிறார்களே?**

! பாழான நோட்டுகளை வங்கியில் மாற்றிக் கொள்ளலாம்; அழுக்காகிப் போன மனங்களை நினைத்தால்தான் கவலையாக உள்ளது.

● ஆர்.லதா, தேலூர்

**? "ஜெயலலிதா சொல்வதுபோல் நான் முதல்வருக்கு எடுபிடி வேலை செய்கிறேன் என்றால் அது என் வாழ்வில் கிடைத்த பாக்கியம்" என்று ஆற்காடு வீராசாமி கூறியுள்ளது பற்றி உங்கள் கருத்து...?**

! ரொம்ப சந்தோஷம். கலைஞருக்கு எடுபிடி வேலை செய்வது அவரது பாக்கியமாகவே இருக்கட்டும், ஆட்சேபணையே இல்லை. ஆனால், அதே சமயத்தில் அவர் அமைச்சராகவும் இருப்பதுதான் தமிழகத்தின் துர்பாக்கியம்! இரண்டில் ஒன்றை அவர் துறப்பது நல்லது.

# நீங்கள் கேட்டவை

## - தராசு

● எஸ்.பக்கிரிசாமி, திருவாரூர்

**? கூட்டணி அமைப்பதிலேயே இன்னும் குழப்பங்கள் நிலவும்போது, கட்சிகளின் பிரசாரம் தமிழ்நாட்டு மக்களிடம் எடுபடுமா?**

! கூட்டணி அமைப்பதில் மட்டுமா குழப்பம்? பிரசாரத்திலும்தான் குழப்பம். ஆட்சி அமைப்பதிலும் குழப்பம் நீடிக்கும். அப்புறம் ஆட்சி செலுத்துவதிலும் குறைவில்லாத குழப்பம்தான் நிலவும். நம் மூளை குழம்பாமல் இருக்கிறதே, அதுதான் ஆச்சர்யம்!



★ மூன்று நிமிட புரட்சி!



★ புளித்த பழம்!



★ பரிதாப ஜோக்!

● செ.சத்தியசீலன், கிழவன் ஏரி

*? தேர்தலில் கூட்டணி; தேர்தலுக்குப் பின் கூட்டணி - இவற்றுள் நாட்டு மக்களுக்கு நன்மை தருவது எது?*

! குறைந்தபட்ச செயல்திட்டத்துடன் கூடிய, தேர்தலுக்கு முந்தைய கூட்டணிதான் ஓரளவாவது அர்த்தமுள்ளதாக இருக்கும்; மக்களுக்கும் நம்பிக்கை தரும். அது சரி, நாட்டு மக்களின் நன்மையைக் கருதித்தான் கூட்டணிகள் அமைக்கப்படுவதாக நீங்கள் நம்புகிறீர்களா என்ன?

● த.பரதன், திருவாரூர்

*? தே.மு.தி.க. பற்றிய கேள்விக்கு, ''இனிப்பான செய்தியை எதிர்பார்க்கிறோம்'' என்று பத்திரிகையாளர்களிடம் பதில் சொன்ன முதல்வர், இரண்டொரு நாட்களிலேயே, ''நாங்கள் அவர்களை அழைக்கவில்லை'' என்று கூறியதைக் கவனித்தீர்களா?*

! தனித்துப் போட்டி என்று விஜயகாந்த் தீர்மானித்ததாகத் தெரிய வந்ததும், 'சீச்சீ இந்தப் பழம் புளிக்கும்' என்று தி.மு.க. தலைவர் கூறுவதில் வியப்பென்ன?

● இராம.பார்த்திபன், வயலூர்

*? சமீபத்தில் ரசித்த ஜோக்?*

! சிவகாசி மாரிமுத்து என்ற காங்கிரஸ் தொண்டர் இலங்கைப் பிரச்னையையொட்டி தீக்குளிக்கப் போக, பீஹாரில் போதுமான இடங்களைத் தர ஆர்.ஜே.டி. மறுத்ததால்தான் அவர் தீக்குளித்தார் என்று தங்கபாலு பேசியது.

● அ.ராஜா ரஹ்மான், கம்பம் ★

*? ஹிந்துக்கள் நலன் விரும்பும் வேட்பாளர்களுக்கு மக்கள் வோட்டளிக்க வேண்டும் என்று விச்வ ஹிந்து பரிஷத் தலைவர் அசோக் சிங்கால் கூறியிருப்பது பற்றி...?*

! ஹிந்துக்களின் நலனை, வன்னியர் நலம், நாடார் நலம், தலித் நலம், தேவர் நலம், முதலியார் நலம், பிராமணர் நலம் என்றெல்லாம் தமிழ் நாட்டில் பிரிப்பார்கள் என்றும், மற்ற மாநிலங்களில் வேறு வேறு விதமாகப் பிரிப்பார்கள் என்றும் அசோக் சிங்காலுக்குத் தெரியாது போலும்!

● ரா.சாலமோன், ஆலங்குளம்

*? உலகப் பணக்காரர்கள் வரிசையில் முதல் பத்தில், நான்கு இடங்களை இந்தியர்கள் பெற்றுள்ளது, இந்நாடு வளர்ந்துள்ளதைக் காட்டுகிறதா?*

! நான்கு பேர் உலகப் பணக்காரர்களானதற்காக சந்தோஷப்படலாம்தான்; ஆனால், அதே சமயம், நாற்பது கோடி பேர் வறுமையில் உழன்று கொண்டிருப்பதை எண்ணினால் வருத்தமாயிருக்கிறதே! இதுவா வளர்ச்சி!

★ கனக்கும் கவலைகள்




**❏ ரூ.150/-பரிசு பெறுபவர் :**
**பி.இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு**

**★ ரூ. 75/- பரிசு பெறுபவர் :**
**அ.ராஜா ரஹ்மான், கம்பம்**



★ எடுபிடி பாக்கியம்!



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம், சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## தமிழ் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்

### ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 20 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.



# கல்கி



2009 ஏப்ரல் 5
ஸர்வதாரி பங்குனி 23
மலர் : 67
இதழ் : 36

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## வருண் காந்தியின் வன்முறைப் பேச்சு!

மற்றும் ஒரு குடும்பச் சண்டை இந்திய அரசியலை ஆட்டிப் படைத்துக்கொண்டிருக்கிறது! வருண் காந்தியின் மதவாத-வன்முறைப் பேச்சுக்குக் கண்டனம் தெரிவித்த ப்ரியங்கா, அவர் தங்கள் குடும்பத்தின் கொள்கைகளுக்கு விரோதமாகப் பேசியிருப்பதாகச் சாடியிருக்கிறார்!

வருண் காந்தி பா.ஜ.க.வில் சேர்ந்ததே, இந்திரா காந்தி குடும்பத்தின் மேனகா-சோனியா பிரிவுகள் ஒத்துப் போகாததால்தான்! பா.ஜ.கவும் இதனால்தான் அவரை 'வளர்த்துவிட்டு', கொம்பு சீவி வேடிக்கை பார்க்கிறது. அரசியல் அடிப்படைகள் அறியாத, அனுபவம் அற்ற ஓர் இளைஞனுக்கு, 'விரோதியின் விரோதி' என்ற ஒரே காரணத்துக்காக தொகுதியும் ஒதுக்கியிருக்கிறது. இந்த வலையில் விழுந்த வருண் காந்தி, 'more royal than the king' என்கிற ஆங்கிலச் சொல்வழக்குக்கேற்ப, பா.ஜ.க.வை பல படி மிஞ்சும் வகையில் சிறுபான்மையினர் விரோதப் பேச்சுக்களைக் கொட்டியிருக்கிறார்!

பா.ஜ.க.வின் சூத்திரதாரிகளான ஆர்.எஸ்.எஸ்., வி.எச்.பி., பஜ்ரங் தள் போன்றவற்றிடம் நற்பெயர் எடுக்க விரும்பினாரோ என்னவோ, அவர்களையெல்லாம் தூக்கிச் சாப்பிடும் அளவுக்குப் பேசியிருக்கிறார், தமது பிலிபிட் தொகுதியில்!

வருண் காந்தி பேசிய வார்த்தைகளுக்கும் தனக்கும் தொடர்பில்லை என்று முதலில் அவசர அவசரமாகக் கை கழுவிய பா.ஜ.க, 'அவரைத் தேர்தலில் நிற்க அனுமதிக்க வேண்டாம்' என்ற அறிவுரையை நிராகரித்ததுதான் விசித்திரம்! அது மட்டுமின்றி, அந்த அறிவுரையை




வழங்கிய தேர்தல் கமிஷனை, அக்கட்சி கடுமையாக விமர்சித்திருப்பது பெரும் அபத்தம். யாரும் அறிவுரை கூறாமலே வருண் காந்தியின் வேட்பாளர் அந்தஸ்தை பா.ஜ.க. ரத்து செய்திருக்கவேண்டும். அதில் தவறியதோடு, குற்றம்சாட்டப் பெற்றுள்ள சஞ்சய் தத், ஜகதீஷ் டைட்லர், சஜ்ஜன் குமார் போன்றோர் வேட்பாளர்களாக நியமனம் பெற்றுள்ளனரே என்று வாதிடுகிறது! ஒரு தவறை இன்னொரு தவறால் நியாயப்படுத்த நினைக்கும் சிறுபிள்ளைத்தனம் இது. (டைட்லரும் சஜ்ஜன் குமாரும் நீதிமன்றத்தால் விடுவிக்கப்பட்டவர்கள்.)

தேர்தல் கமிஷனுக்கு, வேட்பாளர் தேர்வை நிர்ணயிக்கும் அதிகாரம் கிடையாது. அவ்வுரிமை கட்சிகளினுடையது. வருண் காந்தி நியமனத்தை ரத்து செய்ய கமிஷன் ஆலோசனைதான் கூறியிருக்கிறதே தவிர, ஆணை பிறப்பிக்கவோ கட்டாயப்படுத்தவோ இல்லை.

இவ்விஷயத்தில், தேர்தல் கமிஷனின் அதிகார எல்லைகளைப் பற்றி பா.ஜ.க. விமர்சிப்பதும் கமிஷனைக் கண்டிப்பதும் உண்மையான பிரச்னையிலிருந்து கவனத்தை திசை திருப்பும் முயற்சிகள்தான்.

வருணின் தொகுதியான பிலிபிட் காவல் நிலையத்தில், சமர்ப்பிக்கப்பட்டுள்ள ஒளி மற்றும் ஒலிப்பதிவு ஆதாரங்கள் போலியானவை என்றும் தமக்கு அவப்பெயர் ஏற்படுத்தவே திருத்தி, திரிக்கப்பட்டவை என்றும் அவர் சொல்வது நம்புதற்குரியதாக இல்லை. அவை அவ்வாறு திரிக்கப்பட்டதற்கான சான்றுகளே இல்லை என்று தேர்தல் கமிஷன் ஊர்ஜிதப்படுத்தியிருக்கிறது.

வருண் காந்தியின் வன்முறைப் பேச்சு மட்டும் நிராகரிக்கப்பட்டதாகக் கூறிவிட்டு, அவரையே வேட்பாளராக பா.ஜ.க. நிறுத்துவதால் அக்கட்சியின் நம்பகத்தன்மை ஆட்டம் காண்கிறது.

முக்கியமான வட மாநிலங்களில் கூட்டணி உடைந்ததால் காங்கிரஸ் பலவீனமடைந்துள்ள நிலையில், அங்கெல்லாம் பா.ஜ.க.வின் வெற்றி வாய்ப்புகள் சற்று அதிகரித்தன. ஆனால், யானை தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக்கொள்வதுபோல், அக்கட்சி வருண் காந்தியை ஆதரித்து, தனது வெற்றி வாய்ப்புகளைக் குறைத்துக்கொண்டுள்ளது! ●

# காணாமல் போனவன்

வெ.தமிழழகன்



அந்தப் பெரியவர் யார் யாரிடமோ கெஞ்சினார். கண்கள் தளும்பியிருந்தன. கையில் வாக்கிங் ஸ்டிக். மிகவும் வயதானவர். பரசு அவரைப் பார்த்தான். பாவமாக இருந்தது அவனுக்கு. அருகில் போய் விசாரித்தான்.

''தம்பி! ஊர்லேருந்து என் மகன் வீட்டுக்கு வந்தேம்பா. வாக்கிங் போவேன். திரும்பி வர்றப்போ வழி தெரியலை. உன்னைக் கையெடுத்துக் கும்பிடறேன். எப்படியாச்சும் மகன் வீட்டில் கொண்டு சேர்த்திடு'' என்று கும்பிட்டார். முதுமையும் இயலாமையும் கலந்த கண்ணீர்.

''தாத்தா! என்ன பெரிய வார்த்தையெல்லாம் சொல்றீங்க. வாங்க... உங்களை நான் வீடு சேர்க்கிறேன்'' என்ற இளைஞன் அவர் மகனது பெயர்... தெரு... வீட்டு அடையாளம் அனைத்தையும் விசாரித்தான். தனக்குத் தெரிந்தவரை தட்டுத்தடுமாறி விலாசத்தைச் சொன்னார் பெரியவர். பரசு பலரிடம் விசாரித்து ஒரு வழியாய் வீடு சேர்த்தான். அவரது குடும்பமே நன்றி சொன்னது.

''பரவாயில்லைங்க. இதெல்லாம் மனுசனுக்கு மனுசன் செய்யற சின்ன உதவிதானே. நான் வரேன்'' என்று கூறினான் பரசு.

சாப்பிடச் சொன்னதற்கும் புன்னகையுடன் மறுத்து விட்டுக் கிளம்பி விட்டான்.

அன்று இரவு அனைவரும் டி.வி.முன் அமர்ந்து செய்தி கேட்டனர். பின்... காணாமல் போனவர் பற்றிய அறிவிப்பு வந்தது. அதைப் பார்த்து அதிர்ந்தனர்.

''ஒரு முக்கிய அறிவிப்பு... பரசு என்ற இளைஞரைக் காணவில்லை. மஞ்சள் சட்டையும், நீல நிற பேண்ட்டும் அணிந்திருப்பார்.''

- பரசுவின் புகைப்படத்தைக் காட்ட அனைவரும் அதிர்ச்சியில் உறைந்தனர்.

# தங்களின் பிறந்த நாள், திருமண நாளில் ஒரு நாள் உணவு வழங்கி நேசம் முதியோர் இல்லத்தில் கொண்டாடி மகிழ வேண்டுகின்றோம்

## வயதான முதியோர்களுக்கு உதவி செய்யுங்கள்!




கோயமுத்தூரில் உள்ள நேசம் முதியோர் இல்லத்தில் 50 க்கும் மேற்பட்ட வயதான முதியோர்கள் உள்ளனர். இவர்களுக்கு உணவு, உடை, தங்குமிடம், மருத்துவம் இலவசமாக வழங்கி பராமரிக்கப்பட்டு வருகின்றனர். இவர்களுக்கு தாங்கள், தங்களால் இயன்ற உதவியினை "நேசம் முதியோர் இல்லம்" என்ற பெயரில் செக்,டிராப்ட்,**M.O.** செய்யலாம். நேரில் பார்வையிட்டும் உதவி செய்யலாம்.

**ஒரு நாள் உணவிற்காகும் செலவு ரூ. 2500/-**

முதியோர்களுக்கு செய்யும் தொண்டு !
இறைவனுக்கு செய்யும் தொண்டாகும் !!

**THE SECRETARY,**
**NESAM HOME FOR THE AGED,**
**COIMBATORTE 641 107.**
**MOBILE No. : 99655 - 09313.**
**E-Mail: nesamagedhome@gmail.com**

'படிப்பு எப்படி அனுபவத்துக்கு ஈடாகும்? அந்தக் காலத்து பி.காம்.தான். ஆனா முப்பது வருஷ சர்வீஸ்.

காப்பி, டீ... ஏன் வெறுந்தண்ணி கூட இல்லாம மணிக்கணக்கா வேலை பார்த்திருக்கேன். வருடாந்திர அக்கவுண்ட் முடிவிலேருந்து ஆடிட் வரை நான் ஒருத்தனே பார்த்திருக்கேன். எத்தனை பேரு மத்த பிரைவேட் கம்பெனியில கொஞ்சம் அதிகம் சம்பளம் தர்றாங்கன்னு ஓடியிருக்காங்க... நான் ஓடினேனா?...'

''என்னங்க சாப்பாடு ஆறிட்டிருக்கு. கையைக் கையை ஆட்டிக்கிட்டு தனக்குத்தானே மனசுக்குள்ளேயே பேசிக்கறீங்க. உங்க துக்கம் என்னன்னு எனக்கும் சொல்லக் கூடாதா?''

மரகதத்தின் கண்கள் குளமாகும் நிலையிலிருந்தன. துடைத்துக் கொள்ள ஏதுவாக ஒரு கை புடைவைத் தலைப்பு பக்கம் அனிச்சையாகச் சென்றிருந்தது. கணவர் மாதவன் கொஞ்சம் சீரியஸ் பேர்வழி என்று மரகதத்துக்குத் தெரியும். ஆனால், சாப்பிடும்போது தட்டைக் கூட கவனிக்காமல் அவர் செய்யும் சேஷ்டைகள் இப்போது அதிகமாயிருந்தன.

மனதளவில் குமுறிக் கொண்டிருந்த மாதவன் நனவுலகத்துக்குத் திரும்பினார்.

''எல்லாம் என்னோட பிரமோஷன் கவலைதான். இன்னும் இழுத்தடிக்கறாங்க. மேல ஏற்கெனவே சி.ஏ., எம்.பி.ஏ. அப்படீன்னு இரண்டு மூணு பேரும் எப்பவோ வந்தாச்சு.''

''கவலைப்பட்டா காரியம் ஆயிடுங்களா? ஒவ்வொரு சனிக்கிழமையும் சனீஸ்வரனைப் பார்த்துட்டு வாங்களேன்.''

'அப்ப மட்டும் ஆயிடுமா?' என்று கேட்க நினைத்தவர் வாயை மூடிக் கொண்டார். சாப்பாடு ருசிக்கவில்லை; பேப்பரைக் கூட ஊன்றிப் படிக்க முடியவில்லை. ஏன் டீ.வி.கூட ஈர்ப்பதில்லை. குறைந்த பட்சம் மனைவி, குழந்தை



களைப் பார்த்து கோபப்படாமல் இதுவரை இருக்க முடிகிறது... அதாவது தொடரட்டும்.

மாதவனின் கணக்கும் கனவுகளும் எதிர்காலம் குறித்தே இருந்தன.

'ஒரு பிரமோஷன் ஆச்சுன்னா பத்து பர்செண்ட்டாவது சம்பளம் அதிகமாகும். ரிடையராக இன்னும் நாலு வருஷம் இருக்கு. பிரைவேட் கம்பெனி. ஐம்பத்தெட்டுக்கு மேல இன்னும் ரெண்டு வருஷமாவது நீட்டலாம். அதிர்ஷ்டம் இருக்கான்னு பார்ப்போம். பி.எஃப், கிராஜுவிடி அதிகமாகும். பெண் கல்யாணத்துக்குக் கொஞ்சம் ஒதுக்கி வைச்சுட்டா மிச்சம் எப்படியும் கணிசமா தேறும். போஸ்ட் ஆபீஸ் இல்லைன்னா கவர்ன்மெண்ட் பேங்க் எதிலாவது போட்டு வச்சா பென்ஷன் போதுமானதாக இருக்கும்... கொஞ்சம் தாராளமா இருக்கலாம்... சீனியர் சிட்டிசன் ஆனா ஏர் டிக்கெட் கூட எடுக்கலாம்... பிரமோஷன்ல ஆபீஸ் கார் கூட கிடைக்கும்.

மாதவன் கால்குலேட்டரை வைத்து அடிக்கடி கணக்கு போட்டுப் பார்த்திருந்தார். அபிலாஷைகள் தான் கூடியிருந்தன. கைக்கு எட்டியது ஏன் வாய்க்கு எட்ட மறுக்கிறது என்று புரியவில்லை. பொறுமையை இழந்து கொண்டிருந்தார். ஏமாற்றம் இரத்தக் கொதிப்பையும் மன அழுத்தத்தையும் மட்டும்தான் ஏற்றியிருந்தது.

**ம**றுநாள் லஞ்ச் நேரத்தில் மாதவன் யோசனையில் இருந்தபோது நண்பர் சாரங்கனும் சேர்ந்து கொண்டார். பாரத விலாஸாய் இருக்கும் அந்த கம்பெனியில் இந்தச் சமயத்தில்தான் தமிழில் பேசிக் கொள்ளவும் நேரம் கிடைக்கும்.

தத்தம் இல்லத்தரசிகள் கொடுத்ததைக் கொஞ்சம் பகிர்ந்து கொண்டார்கள்.

''இன்னிக்கும் பி.எஃப், கிராஜுவிடி கணக்கு பாத்தியா?''

''ம்! என்ன பலன்?'' மாதவன் விரக்தியைக் காட்டினார்.

''முதலுக்கே மோசம் வரும்போல இருக்கே!''

சாரங்கனின் வார்த்தைகள் மாதவனைத் திடுக்கிட வைத்தன. என்னவென்று கேட்பதுபோல் புருவத்தை நெறித்தார்.

''பொருளாதார மந்த நிலை உனக்குத் தெரியாதா? வெளியில பார்த்தீங்கன்னா எல்லாரும் அப்பப்ப கூடிக்கூடிப் பேசறது தெரியும். எத்தனை பேரை வேலையிலிருந்து எடுக்கப் போறாங்களோ தெரியாது. ஜெனரல் மேனேஜர் உங்க டிபார்ட்மெண்ட்ல எல்லாரையும் வரச் சொல்லிப் பேசலாம்.''

மாதவன் சிலையாய் அமர்ந்திருக்க, சாரங்கன் தன் டிஃபன் பாக்ஸை எடுத்துக் கொண்டு நகர்ந்தார். சொந்தக் கவலையில் சுற்றுப்புறத்தை மறந்தது மாதவனுக்குத் திடீரென்று உறைத்தது. அவ்வப்போது ஜெனரல் மானேஜர் அவரிடம் கம்பெனியின் சம்பள அக்கவுண்ட், டிராவல்ஸ் அக்கவுண்ட்... இத்யாதி கொண்டு வந்து கொடு என்பார். போர்ட் மீட்டிங் சம்பந்தமாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தார்.

லெட்ஜரை முன்னால் எடுத்து வைத்துக் கொண்டிருந்தாலும் மாதவனுக்குக் கண்கள்தான் ஓடவில்லை. ஐம்பது வயதை அதிகமாய்க் கடந்து கம்ப்யூட்டர் முன் அமரக் கூடத் தெரியாத அவர் போன்ற ஜந்துக்கள்தான் கம்பெனிக்கு முதல் இலக்காக

கனவு

சீதாராம்

## 'வாரியார்' தெரு வருமா?

திருமுருக கிருபானந்த வாரியாரின் நூற்றாண்டு விழா கொண்டாட்டத்தின்போது வாரியார் வாழ்ந்து மறைந்த, சென்னை சிந்தாதரிப்பேட்டையிலுள்ள சிங்கண்ணச் செட்டித் தெருவுக்கு வாரியார் பெயர் சூட்ட வேண்டுகோள் விடுத்து 23.11.06ல் மனு அனுப்பினேன். அரசாணை எண்:573ன் படி என் மனு நிராகரிக்கப்பட்டதாக அரசு பதில் அளித்தது. ஆனால் கடந்த பிப்ரவரி மாதம் மறைந்த கிறிஸ்துவ மதபோதகர் டாக்டர் டி.ஜி.எஸ். தினகரனின் பெயர் கிரீன்வேஸ் சாலைக்குச் சூட்டப்பட்டுள்ளது. அரசாணையைத் தளர்த்திய அரசு வாரியார் பெயரையும் மதப் பாகுபாடு இன்றிச் சூட்டுமா?

- பெ.கூ.மணி, வேலூர்



இருக்குமோ என்ற வேதனை உடல் முழுவதும் பரவியது.

எவ்வளவு நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தாரோ தெரியாது. மாலை பியூன் வந்து ஜெனரல் மேனேஜர் கூப்பிடுவதாகச் சொன்னான். பதறி அடித்துக் கொண்டு எழுந்தார். டைரியையும் எடுத்துக் கொண்டு விரைந்தார். ஜெனரல் மேனேஜர் அறைக்குள் நுழையும் முன் மாதவன் வேண்டாத தெய்வம் இல்லை.

முகத்தில் சவக்களையுடன் நாலைந்து நபர்கள் உட்கார்ந்திருந்தனர். மாதவன் வந்ததும் பேச்சைத் தொடங்கிய ஜெனரல் மேனேஜர், தலையசைத்து அவரை அமரச் சொன்னார்.

''வருவாய் குறையத் தொடங்கியிருக்கு. ஆனா செலவு அதிகம். செலவைக் குறைக்க டைரக்டர்கள் யோசனை சொல்லியிருக்காங்க...''

ஒவ்வொருவரும் மற்றவர்கள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். ஜெனரல் மேனேஜர் தொடர்ந்தார்.

''டிராவல்ஸ் குறையணும். வெளியூர் பிராஞ்ச் சம்பந்தமா டெலிஃபோன்ல கான்ஃபரன்ஸ் செய்யலாம். அத்தியாவசியமான பயணங்கள் போது கெஸ்ட் ஹவுஸ்ல தங்கச் செய்யணும். வெளியில் ஹோட்டல்ல தங்க வேண்டாம். ஆபீஸ் பார்ட்டி, விருந்து... அப்படியெல்லாம் இனிமேல் வேண்டாம்... எல்லாருக்கும் சர்குலர் அனுப்பிடுங்க.

அ ப் பு ற ம் . . . அப்புறம்...'' ஜெனரல் மேனேஜர் தயங்கினார்.

மாதவன் முன்னால் பூச்சி பறந்து கொண்டிருந்தது.

''ஏஜென்சி மூலமா எடுத்திருக்கிற எல்லாரையும் எடுத்துடணும். இனிமே டைரக்டர்கள் சொல்ற வரைக்கும் புதுசா யாரையும் வேலைக்கு எடுக்கவும் கூடாது.''

அறையில் திடீரென்று நிசப்தம்.

பர்சனல் துறை மேனேஜர்தான் தைரியமாகக் கேட்டார்.

''நிரந்தர வேலையில் இருக்கறவங்களுக்குப் பிரச்னையில்லையே சார்?''

''இல்ல... முன்ன மாதிரியெல்லாம் எக்ஸ்டென்ஷன் கிடைக்காது. அப்புறம் அநேகமாக இந்த வருஷம் இன்க்ரி

மெண்ட், போனஸ் இருக்காது... பத்து சதவிகிதம் வரை குறைய வாய்ப்பு இருக்கு!''

மற்றவர்கள் எல்லாம் 'த்சோ' கொட்டினார்கள். மாதவனுக்கு ஏதோ மூச்சு வந்ததுபோல் இருந்தது. கூட்டம் முடிந்ததும் தன் இடத்துக்குத் திரும்பினார்.

மேஜைமேல் அவர் வைத்துவிட்டுப் போன கால்குலேட்டர் அப்படியே இருந்தது. பத்து சதவிகிதம் குறைத்து உத்தியோக ஓய்வு வரை கணக்கு போட்டுப் பார்த்தார்.

''ம்... அப்படி ஒன்னும் மோசமில்லை. கொஞ்சம் கட்டுப்பாடா இருக்கணும். அவ்வளவுதான்...'' முணுமுணுப்புடன் எழுந்தார்.

> **"கம்ப்யூட்டர் முன் அமரக்கூடத் தெரியாத அவர் போன்ற ஜந்துகள் தான் கம்பெனிக்கு முதல் இலக்காக இருக்கும்"**

வீடு போகும் வழியில் இதுவரை கண்களில் படாத அகர்வால் இனிப்புக்கடை தெரிந்தது. மரகதத்துக்கு சோன் பப்டி என்றால் உயிர். அரைக் கிலோ வாங்கிக் கொண்டு கிளம்பினார்.

அவர் முகமலர்ச்சியையும் கைகளில் தெரிந்த இனிப்பு பாக்கெட்டும் மரகதத்துக்கு எதையோ கூறின...

''என்னங்க... பிரமோஷன் கிடைச்சாச்சா?''

''அப்படித்தான் வைச்சுக்கோயேன்!''- சொல்லியபடியே செருப்பைக் கழற்றி விட்டு முகம் கழுவப்போனார். ●

# பதினாறும் பெற்று...

காலிங்பெல்லை அழுத்திவிட்டுக் காத்திருக்கிறார் இளம் விற்பனையாளர். கதவு திறக்கப்பட்டதும் படபடவென்று, 'புதிதாக அறிமுகப்படுத்தியிருக்கிறோம்' என்று உற்சாகமாக விற்பனையாளர் துவக்கும்போதே, 'என்ன மிஸ்டர், நைட் ஷிப்ட் போயிட்டு வந்து தூங்கறேன். உங்க லொள்ளு தாங்க முடியலையே' என்று கதவைப் படீரென்று மூடினால் விற்பனையாளர் மனநிலை எப்படி இருக்கும்? 'ஐயோ... இந்த வேலைக்கே ஒரு கும்பிடு' என்று ஓடிவிடத் தயாராகிவிடுவாரல்லவா! இதுபோன்ற ஒரு சூழ்நிலையில் விற்பனையாளர் மனம் எப்படி யோசிக்கும் என்பதைக் கண்டறிய உளவியல் சோதனை உண்டு. ஒரு விற்பனையாளருக்கு முதலில் தேவை விடாமுயற்சி, தளராத மனது, எளிதில் புரிய வைக்கும் தகுதி. இவையெல்லாம், அவரிடம் இருக்கின்றனவா என்பதை இந்தப் பரிசோதனை மூலம் கண்டுபிடித்து விடலாம்.

விற்பனையாளர்களுக்கு மட்டுமின்றி, பொதுவாகவே ஒரு மனிதனின் பணித் தகுதியைக் கண்டறிய உளவியல் சோதனைகள் அமைக்கப்படுகின்றன. ப்தினாறே கேள்விகளில் உங்களின் ஆளுமைத் திறன், தலைமைப் பண்பு, குழு மனப்பான்மை, ஊக்க சக்தி போன்ற தன்மைகளை வெளியே கொண்டு வந்து விடலாம். இது ஒரு விஞ்ஞானபூர்வமான சோதனை. ஒரு கல்லூரி மாணவருக்கு எந்த மாதிரியான வேலை பொருத்தமாக அமையும் என்றும் தீர்மானிக்க முடியும்.

ஒருவர், ஒரு நிறுவனத்துக்கு வேலைக்குச் செல்லும்போது, அந்தக் குறிப்பிட்ட வேலைக்கு மட்டும் தகுதியானவராகச் சென்றால் போதாது. தனது படிப்பு மற்றும் வேறு பல தகுதிகளை வளர்த்துக் கொண்டு, எந்தத் துறை கொடுத்தாலும் அதில் பளிச்சிட முடியும் என்ற வகையில் செல்ல வேண்டும். இந்த வகையிலும், சோதனைக்கான கேள்விகள் அமைகின்றன. இந்தச் சோதனைக்கான கேள்விகளை வடிவமைப்பது பெரிய சவாலான விஷயம். உதாரணமாக முன்னர் சொன்ன விற்பனையாளர் வேலையை எடுத்துக் கொள்வோம். அனுபவமிக்க பல்வேறு விற்பனையாளர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்கள் கடந்து வந்த பாதை, அவர்களின் மாறுபட்ட மனநிலை ஆகியவற்



'மா·.பா' பாண்டியராஜன்

றைக் கணித்து கேள்விகள் வடிவமைக்கப் படுகின்றன.

நடத்தை விஞ்ஞானம் (behavioural science) குறித்து தீவிர ஆராய்ச்சி செய்த பிரான்ஸிஸ் கேடன், தர்ஸ்சோன், ஸ்டீவென்ஸ், ஸ்பியர்மேன், ரேமண்ட் கேட்டல் (பார்க்க Blog) ஆகியோர் போட்டுக் கொடுத்த கட்டமைப்பை அடிப் படையாகக் கொண்டு கேள்விகள் தயாரிக் கப்படுகின்றன.

மாஃபாவில் இதுகுறித்து ஆராய, கேள்விகளை வடிவமைக்க, ஆட்களை மதிப்பீடு செய்ய விஞ்ஞானபூர்வமான நடைமுறையைக் கையாள்கிறோம். ஒருவரின் நடத்தையை எட்டு விதத்தில் கண்டறியலாம். உலகச் சூழலில் ஒருவன் எப்படி தன்னைத் தகுதியானவனாக வைத் துக் கொண்டிருக்கிறான், புதுமையான எண்ணங்கள் கொண்டவனா, கற்றுக் கொள்ளும் ஆர்வம் உண்டா, அவனின் நம்பகத்தன்மை, பிரச்னைகளைத் தீர்க்கும் திறமை, ஆழ்ந்த அறிவு, குழுவுடன் சேவை செய்யும் மனப்பான்மை, பலிச் சென்று பழகும் விதம் ஆகியவைதான் இந்த எட்டு தன்மைகள். இவற்றைக் கண்டு பிடிக்கும் அடிப்படையில்தான் கேள்விகள் இருக்கும். என்ன... உங்களைப் பற்றி உங்கள் உள்மனத்தில் ஊசலாடிக் கொண்டி ருக்கும் விஷயங் களைப் பற்றித் தெரிந்து கொள்ளும் ஆர்வம் அலைமோது கிறதா? உடனே சிஸ்டம் முன்னால் போங்கள். நீங்கள் தொடர்புகொள்ள வேண்டிய மின் னஞ்சல் முகவரி: shobit.sharma@mafoi.com உங்களின் முழுப் பெயர், முகவரி, வயது, படிப்பு, தொடர்பு தொலைபேசி ஆகிய விவரங்களுடன் இந்த மின்னஞ்சல் முக வரியை அனுகுங்கள். இந்தச் சோதனையில் நீங்கள் கலந்து கொள் வதற்கு வசதியாக log.inம், பாஸ்வேர்டும் வழங்கப்படும். ஒரு வாரத்துக்குள் உங்களுக்கு அறிக்கை கொடுக்கப்படும். இந்த அறிக்கை மூன்று பிரிவுகளில் அமைந்திருக்கும். இந்தச் சோத னைக்கான கேள்விகள் ஆங்கிலத்தில்தான். நாங்கள் தற்பெருமையாகச் சொல்ல வில்லை. இந்தச் சோதனையில் கலந்து கொண்டு 'தங்களை அறிந்து கொண்ட' ஆயிரக்கணக்கான இளைஞர்கள், தங்கள்



# பாண்டி'S BLOG

மனிதனின் குணாம்சங்களை மதிப்பீடு செய்யும் 'நடத்தை விஞ்ஞானம்' என்ற கலையில் புகழ் பெற்று விளங்கியவர் ரேமண்ட் பெர்னார்டு கேட்டல். இங்கிலாந்தில் பிறந்து ஹொனலூலுவில் இறந்த கேட்டல், மனிதனின் நடத்தை குறித்து ஐம்பது புத்தகங்களும், ஐந்நூறுக்கும் மேற்பட்ட கட்டுரைகளும் எழுதியிருக்கிறார். மனிதனின் நடத்தை "இப்படித்தான் இருக்கும்" என்று விரிவாகவே எழுதி வைத்திருக்கிறார் கேட்டல்.



கேட்டலின் தந்தை பொறியியல் வல்லுனர். ராணுவத் தளவாடங்கள் மற்றும் நீராவி இன்ஜின்கள் தொடர்பாகப் பல புதிய கண்டுபிடிப்புகளுக்குச் சொந்தக்காரர். ஆனால், தந்தையின் வழியில் கேட்டல் செல்லவில்லை. சிறு வயதிலிருந்தே அவரைக் கவர்ந்தவர்கள் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல், பெர்னார்ட்ஷா, ஹெச்.ஜி.வெல்ஸ் போன்ற சிந்தனையாளர்கள்தான். மிகத் தீவிர ஆராய்ச்சிக்குப் பிறகு, பொருளாதார மற்றும் அரசியல் பிரச்னைகளில், தீர்வு காண்பதற்கு, உளவியலின் ஒரு புதிய பரிமாணமாக நடத்தை விஞ்ஞானம் என்ற கலை உதவும் என்பதைக் கண்டறிந்தார் கேட்டல். "பாரம்பரியமாக நடைமுறையில் இருந்த சில தீர்வு வழிகள் இனி செல்லாது" என்றும், "புதிய சவால்களைச் சந்திக்க, மனிதனின் இயற்கையான குணநலன்களைப் புரிந்து கொள்வது அவசியம்" என்றும் நெற்றியடியாகச் சொன்னார் கேட்டல்.

தனிமனிதக் குணநலன்களை மதிப்பீடு செய்வதற்கு உகந்த ஆராய்ச்சிகளை மேற்கொள்ள, ஒரு பரிசோதனைக் கூடத்தையே அமைத்திருந்தார் கேட்டல். அதில் அவருக்கு உதவ நிறைய இளம் ஆராய்ச்சியாளர்கள் இருந்தனர். உலகத்தில் உள்ள அத்தனை உளவியல் தொடர்பான பத்திரிகைகளிலும், கட்டுரைகள் எழுதிக்கொண்டிருந்தார் கேட்டல். "நாம் படிக்கும் வேகத்தைக் காட்டிலும் வேகமாக எழுதக் கூடியவர் கேட்டல்" என்று அவரது நண்பர்கள் அவரைச் சொல்வார்களாம். எழுபது வயதில் மறைந்த கேட்டல், நடத்தை விஞ்ஞானம் என்ற கலைக்கு அடித்தளம் அமைத்தார். மனிதனின் ஆளுமை, ஆற்றல், திறன்கள் குறித்து விவரமாகவே எழுதி வைத்துவிட்டுப் போயிருக்கிறார். உளவியலை ஒரு கலையாகக் கணித்து, நடத்தை விஞ்ஞானத்தை வடிவமைத்த ரேமண்ட் பெர்னார்டு கேட்டல் இருபதாம் நூற்றாண்டின் சாதனையாளர்களில் ஒருவர்.

---

*பலங்களைப் புரிந்துகொண்டு பலவீனங்களைச் சரிசெய்து கொண்டு நல்ல வேலையில் அமர்ந்திருக்கிறார்கள். தங்கள் தனித்திறமையைப் புரிந்துகொள்ளும் வகையில் சோதனை அமைந்திருக்கிறது. நமது நாட்டில் ஒவ்வொரு வருடமும் படித்து முடித்துவிட்டு வேலை தேடும் ஒரு கோடி இளைஞர்களில் நீங்கள் வேலை என்னும் வெற்றிக் கம்பத்தைத் தொட வேண்டுமானால் உங்களை நீங்களே அறிந்து கொள்ளுங்கள். 'தன்னை அறிந்தவன், தரணி ஆள்வான்' என்று நமது பெரியவர்கள் சும்மாவா சொல்லி வைத்தார்கள்.*

*உடனே செயல்படுங்கள். மின்னஞ்சலில் முதல் நூறு பேர்களுக்கு log.in இலவசம்.*

***(வெளிச்சம் வீசும்)***

எழுத்தாக்கம் : **ஸ்ரீநி**

---



Facebook New Design is Awkward on Flickr - Ph

File Edit View Favorites Tools Help

www.studygs.com

# கடக்கவேண்டிய

**க**ல்வி ஒரு இனிய பயணம். அதில் தேர்வுகளே நாம் அடைய வேண்டிய இறுதி இலக்கு. இப்போது பயணத்தின் இறுதி நிலையை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். கடந்து வந்த தூரம் நம்மைச் சோர்வுக்கு ஆளாக்கக்கூடும். எனினும் ஓய்வெடுக்க வேண்டிய நேரமல்ல இது.

மீதமிருப்பது இன்னும் கொஞ்சமே கொஞ்சம் தொலைவுதான். உடலை, மனத்தை ஒருமுகப்படுத்தி ஒரே பாய்ச்சலில் கடந்துவிடக்கூடிய தூரமே நம் காலடியில் காத்துக் கிடக்கிறது.

வருடம் முழுவதும் அவ்வப்போது கண்டு, கேட்டு, கற்றறிந்த பாடங்கள்தான் எல்லாமும். அதே நேரத்தில் அவை அனைத்தையும் ஒரு குறுகிய காலகட்டத்துக்குள் மீண்டும் நினைவுக்குக் கொண்டு வந்து தேர்வுக்குத் தயார்நிலையில் இருக்க வேண்டியிருக்கிறது.

இந்தத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கு ஒரே வழி நேர நிர்வாகம் மட்டுமே.

சிலரால் தொடர்ந்து படித்துக் கொண்டிருக்க இயலும். ஒருசிலருக்கு அடிக்கடி ஓய்வு தேவைப்படலாம். இதில் பிழையேதும் இல்லை. உங்கள் மனம் ஒத்துழைப்பதற்கு இணங்கவே கால அட்டவணையைத் தயார் செய்து கொள்ளுங்கள்.

விடிவதற்கு முன்பே எழுந்துவிடக்கூடிய பழக்கம் பலருக்கு உண்டு. அதே போல நள்ளிரவு தாண்டியும் படித்துவிட்டுக் காலையில் தாமதமாகவே எழுகின்ற பழக்கமும் சிலருக்குண்டு.

படிப்பதற்கு நேரம் ஒதுக்குவதைப் போலவே படித்ததை அடிக்கடி திருப்பிப் பார்த்து நினைவில் நிறுத்திக் கொள்ளவும் நேரம் ஒதுக்குவது அவசியம்.



வாய்ப்பிருக்கும்பட்சத்தில் படிக்கின்ற இடத்தையும் மாற்றிக் கொள்ளலாம்.

பாடக்குறிப்புகளை எளிமையாகவும், சுருக்கமாகவும் எழுதி வைத்துக் கொள்ளுங்கள். மிகக் குறைவான கால அவகாசத்தில் அவை உங்களுக்குக் கை கொடுக்கும்.

இவ்வாறு மாணவர்களுக்குப் பயன்படக்கூடிய நூற்றுக்கணக்கான வழிகாட்டும் குறிப்புகளை வகைப்படுத்தி வழங்குகிறது இத்தளம்.

o Sharing! - Microsoft Internet Expl




# தூரம் காலடியில்...

**www.tamilsigaram.com**

இம்மண்ணின் சகல உன்னதங்களும் பூமியின் சதைபிளந்து வானப் பரப்பு முழுவதையும் ஆக்ரமிக்கும் விருட்சமாய் விரிந்து பரந்து எழுவதாக, தம்மைப் பிரகடனப்படுத்திக் கொண்டிருக்கிறது தமிழ்சிகரம்.காம்.

செய்திகள், ஆன்மிகம், மருத்துவம், வர்த்தகம், மகளிர், ஆலோசனைகள் என்ற வழக்கமான விஷயங்களைத் தவிர செவ்வியல் மற்றும் நாட்டுப்புறக் கலைகள் மீதும் அக்கறை காட்டியிருக்கிறார்கள்.

பூண்டி திருமுருகன் எழுதிய சிற்பக்கலை பற்றிய கட்டுரை, முற்றிலும் மாறுபட்ட அனுபவம். அழிந்துவரும் நாட்டுப்புறக் கலைகளைப் பற்றியும், அதில் பங்கேற்கும் கலைஞர்கள் சமூகத்தில் நடத்தப்படும் விதம் பற்றியும் மு.ஹரிகிருஷ்ணனின் கட்டுரை வேதனையைப் பகிர்ந்துகொள்கிறது.



உலகமயமாதல் சூழலில் ஒவ்வொரு தனிமனிதனும் தனித்தனி நபராக உருமாறி, மனம் மாறிவரும் சூழலில், கூட்டுழைப்பைக் கோரிநிற்கும் நாடகமே காலத்தின் கலை வடிவமாக முன்னிறுத்தப்பட வேண்டுமென்ற செல்வ புவியரசனின் கட்டுரையும் மனம் கொள்ளத்தக்கதே.

**www.Adhikaalai.com**

அறிவியல் செய்திகளின் மீதான தனிக்கவனம் இத்தளத்தின் சிறப்பம்சம். அன்னாடங்காய்ச்சியின் குறிப்புகள் வழக்கமான இணைய தளங்களிலிருந்து சற்றே வித்தியாசப்படுத்தி, சமூக அக்கறையை வெளிக்காட்டி நிற்கிறது.

சிற்றிதழ் பிரிவில் பெரியார் முழக்கம்.

தகவல் களஞ்சியம், தினம் ஒரு தகவலென்று விழிகள் கொறிக்கவும் வகை செய்திருக்கிறார்கள். ஆனாலும் இலக்கியம் மட்டும் சற்றே... சுவை குறைவாய்.

அநேகமாக எல்லா இணையதளங்களிலுமே இலக்கியம் என்ற பெயரில் மட்டும், மிகவும் குறிப்பாய் கவிதைகளில், ஏன் இவ்வளவு மோசமாக மொக்கை போடுகிறேன்?

**- ஸாந்த்**

கோவலன், பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனால் கொலை செய்யப்பட்ட இடம் இன்றைய மதுரை டி.வி.எஸ். நகரில் 'கோவலன் பொட்டல்' என்ற பெயரோடு அழைக்கப்பட்டு வருகிறது. அங்கே கோவலனை தெய்வமாக வழிபட்டு வருகின்றனர் என்ற தகவலை எழுதி அனுப்பியிருந்தார் கல்கி வாசகர் இரா.கல்யாண சுந்தரம். அந்தச் சிறு துளியை எடுத்துக் கொண்டு கோவலன் கொலை செய்யப்பட்ட சம்பவத்தை மறுவாசிப்பாக்கி, வே.எழிலரசு மூன்று வாரத் தொடர் நாடகம் ஒன்றை எழுதியிருக்கிறார். இதோ உங்கள் வாசிப்புக்கு...

(ஆர்)

காட்சி - 1

***காலம்:*** *கதிரவன் குணதிசை எழுகின்ற இளங்காலைப் பொழுது.*

***இடம்:*** *வைகை நதிக்கரையோரம் வயல்வெளி*

*(ஏர் உழுது கொண்டிருக்கும் முத்தழகன் கரை மேட்டில் நடந்து வரும் நன்மாறனைப் பார்க்கிறார்.)*

# ஒரு கைச் சங்கிலி!

**முத்தழகன்:** வாப்பா நன்மாறா. ஊருக்கு எப்ப வந்த?

**நன்மாறன்:** நேத்து ராத்திரி வந்தன் அண்ணே. விடுப்பு எடுத்துக்கிட்டு உங்களையெல்லாம் ஒரு எட்டு பாத்துட்டுப் போகலாம்னு தான்.

**முத்தழகன்:** உனக்கென்னப்பா அரசாங்கப் பணிக்காரன். மாசம் பொறந்தா பொற்காசு.

**நன்மாறன்:** என்னண்ணே பெரிய அரசாங்க வேலை. நாத்தம் புடிச்ச பொழப்பு.

**முத்தழகன்:** என்னப்பா நாத்தம் அது இதுன்னு சலிச்சுக்கற?

**நன்மாறன்:** ஆமாம்ண்ணே, நாத்தம்தான். ராஜாவோட படுக்கை விரிப்பெல்லாம் காம நாற்றம். அந்தப்புரப் பெண்களின் குருதி நாற்றம், உணவு மேசைகளெல்லாம் புலால் நாற்றம். கேளிக்கை மண்டபங்களில் மதுவின் நாற்றம், அயல் நாட்டுத் தூதர்களின் வருகையால் விளைகின்ற அத்தர் நாற்றம், எனக்கென்னவோ அரண்மனை என்பதே தங்கத்தால் வேயப்பட்ட பிரம்மாண்டமான கழிப்பறை போலத்தான் தோன்றுகிறது. என்னைப் போன்ற பணியாளர்களின் வியர்வை நாற்றம் மட்டும் இல்லையென்றால் அரண்மனையிலிருந்து கிளம்புகின்ற நாற்றம் இந்தப் பாண்டி நாட்டு நுரையீரலையே பாழாக்கிவிடும்.

(முத்தழகன் வியப்புடன் நன்மாறனைப் பார்க்கிறார்.)

**முத்தழகன்:** என்னப்பா திடீர்ன்னு ராகம் போட்டுப் பேசற. நம்ம வீச்சூர் அன்னம்மா கிழவி மாதிரி... அதான்ப்பா எங்க சின்னம்மா பொண்ணு மலர்க் கொடியை உன்னைப் போலவே அரசாங் கப் பணிக்காரன் காளானுக்குக் கட்டிக் கொடுத்தோமே. அந்தக் காளானோட ஆயாக் கிழவிப்பா... நேத்துகூட நம்ம ஊருக்கு வந்துட்டுப் போச்சுப்பா. வெய் யில்ல நடந்து வருதேன்னு நுங்கு சீவி கொடுத்தேம்ப்பா... நல்லா சாப்பிட்டுட்டு ஏப்பம் விட்டுக்கிட்டே, ஒரு பாட்டு படிச்சுதுப்பா... 'உன்னை மாரி பள்ளுப் பறை சாதியில்லைன்னா மொள்ள மாரி ராஜாவெல்லாம் மெள்ள மெள்ள சோத் துக்கில்லாம சாவான்'னு சொல்ற மாதிரி பாட்டுப்பா... எனக்கு முழுசா விளங்கல... ஆனா நீ மனசு நொந்து பேசறதைப் பாத்தா நம்ம பொழைப்பே பரவாயில்லை போல இருக்குதே...



**காட்சி - 2**

***இடம்:*** மதுரை நகருக்கு வெளியே செறிந்து வளர்ந்த மூங்கில்காடு. உள்ளே இடிந்து பாழான நிலையில் உள்ள கொற்றவை கோயில்.

***பொழுது:*** இரவின் முன் சாமப் பொழுது. தலைப்பாகை அணிந்த இருவர் காத்திருக்கின்றனர்.

**ஒருவர்:** அடையாளத்துக்குப் பந்தம் ஒன்றைக் கொளுத்தவா தளபதியாரே? இருளில் இடம் மாறிச் சென்றுவிட வாய்ப்பு உண்டு அல்லவா?

**இரண்டாமவர்:** அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். அவர் சரியாகவே வந்து விடுவார். என்னை விளிக்கும்போது கூகை யாரே என்று கூப்பிடும். பெரியவர் சொன்னது நினைவிலிருக்கட்டும். இருட்டுக்கு எண்ணிலடங்கா செவிகள் உண்டு முல்லையூராரே.

**முல்லையூரார்:** சரியாகச் சொன்னீர்கள் கூகையாரே. புரவியின் குளம்பொலிகள் கேட்கின்றனவே. அவர் வந்துவிட்டார்.

(புரவியொன்று கொற்றவை கோயில் அருகே வந்து நிற்கிறது. அதிலிருந்து இன்னொரு தலைப்பாகை மனிதர் இறங்குகிறார்.)

**முல்லையூரார்:** வாருங்கள் அறம் கூறும் அமைச்சர் பெருமானே!

**வந்தவர்:** வின் அடை



# கோவலன் பொட்டல்

**க**ண்ணகி, மதுரையை எரித்ததற்கான அடிப்படைக் காரணமே கோவலன் கொலைதான் என்கிறது சிலப்பதிகாரம். கோவலனின் தலை துண்டிக்கப்பட்ட இடம், இன்றைக்கு இருக்கும் மதுரையின் டி.வி.எஸ். நகரில் 'கோவலன் பொட்டல்' என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. இங்கே கோவலனின் தலையைத் துண்டிக்கப் பயன்படுத்தப்பட்ட கல்லை, தெய்வமாக வழிபட்டு வருகின்றனர்.

''திருப்பரங்குன்றம் கோயில் மணியோசை எங்கே மிகச் சன்னமாகக் கேட்கிறதோ, அங்கே கொண்டு போய் கோவலனைக் கொலை செய்யுங்கள் என்று உத்தரவிடப் பட்டதாம். அப்படிப் பார்த்தால் இன்றைக்கு இருக்கும் கோவலன் பொட்டல் மிகச் சரியான இடத்தில் இருக்கிறது'' என்கிறார் அவ்விடத்தைப் பராமரிக்கும் சமூகத்தைச் சேர்ந்த ஒருவர்.

ஒரு சிமெண்ட் கொட்டகைக்கு உள்ளே கோவலனைக் கொலை செய்யப் பயன் படுத்தப்பட்ட கல்லைத் தலைகீழாகப் புதைத்து வைத்திருக்கின்றனர். காரணம், இதுபோன்ற அநியாயக் கொலைகள் சமூகத்தில் இனி நடக்கக்கூடாது என்பதுதானாம். அந்தக் கல்லுக்குப் பக்கத்தில் கண்ணகியின் சுமூத் தளவு சிலை இருக்கிறது.

இதுபோன்ற இடங்களைப் பராமரிப்பது நம் ஒவ்வொருவர் முன்நிற்கும் வரலாற்றுக் கடமை!

மொழிகள் வேண்டாம். அமைச்சர் என்று அழைத்தாலே போதுமானது.

**முல்லை:** *(முணுமுணுப்புடன்)* மனச் சான்று உறுத்துகிறது போலும்.

**கூகையார்:** அமைச்சரே... முல்லையூரார் இளையவர், இதைப் போன்ற சந்திப்புகளுக்குப் புதியவர். ஆர்வ மேலீட்டால் நிறையப் பேசுவார். தயை கூர்ந்து பொறுத்தருள வேண்டும். தங்களின் பயணத்தில் சிரமம் ஒன்றுமில்லையே!

**வந்தவர்:** சிரமத்தைப் பார்த்தால் நமது திட்டத்தில் வெற்றி பெற முடியுமா? பாருங்கள் கூகையாரே! ஒரு காலத்தில் மக்கள் கூடிக் களித்து, அருள் பெற்ற இந்தத் திருக்கோயில் எப்படி பாழடைந்து போயிருக்கிறதென்று நீங்களே பாருங்கள்? நெய் விளக்கு இல்லை. மந்திர ஒலிகள் இல்லை. உடுக்கை ஓசைகளில்லை. பலிபீடங்கள் இல்லை. பாழ்பட்டுக்கிடக்கிறாள் என் அன்னை. ஆனால், புதிது புதிதாகக் கோயில்கள் எழுகின்றன. வண்ணப்பூச்சுகளுடன் வடிவமைக்கப்படுகின்றன. வடதிசை நாடுகளிலிருந்து வரவழைக்கப்படும் பளிங்குக் கற்களால் எழுகின்றன. சமணப் பள்ளிகளாக, சாக்கியக் கோயில்களாக. ஆனால், நமது சொந்த மண்ணின் தெய்வங்கள் பசித்துக் கிடக்கின்றன. கூகையாரே! இந்தப் பாண்டிய நாட்டின் பகல்களெல்லாம் பண்பாட்டுப் படையெடுப்பால் இருண்டு கிடக்கிறபோது, நம்மைப் போன்ற நல்லவர்கள் இந்த இருட்டில் கொஞ்சம் சிரமப்பட்டு சில அலுவல்களைச் செய்துதான் தீரவேண்டும் நிரந்தர ஒளி ஏற்படுவதற்காக.

**கூகையார்:** நிச்சயம் ஏற்படும். தங்கள் நம்பிக்கை வீண் போகாது.

**வந்தவர்:** நல்லது கூகையாரே! ஏற்பாடுகள் எம்மட்டில் நிற்கின்றன?

**கூகையார்:** அய்யா! தாங்கள் மங்கல கோட்டாட்சியரிடம் சொல்லி அனுப்பிய தகவல்களை நமது சார்புள்ள கோட்டாட்சியர்களுக்குப் பரிமாறிவிட்டேன். அனைவரும் தயாராயிருக்கிறார்கள். ஒரு சின்னத் தீப்பொறி விழ வேண்டியதுதான். அந்தத் தீப்பொறியைத் தாங்கள் விளைவிக்கப் போகும் தருணத்துக்காகக் காத்திருக்கிறோம். அது நாடெங்கும் பெருந்தீயாகப் பரவ - எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டேன். ஆனால், அதற்கு முன்னதாக எனது சந்தேகங்கள் சிலவற்றைத் தாங்கள் தெளிவுபடுத்தியாக வேண்டும்.



நெய்விளக்கு இல்லை. மந்திர ஒலிகள் இல்லை. உடுக்கை ஓசைகளில்லை. பலிபீடங்கள் இல்லை. பாழ்பட்டுக் கிடக்கிறாள் என் அன்னை.

**வந்தவர்:** கேளுங்கள் கூகையாரே!

**கூகை:** மன்னர் அகற்றப்பட்டபிறகு, சிம்மாசனத்தில் அடுத்து அமரப் போவது?

**வந்தவர்:** இளஞ்செழியன்

**கூகை:** அறிவேன். சில சந்தர்ப்பங்களில் சந்திக்க நேர்ந்ததுண்டு. ஆனால், இளஞ்செழியனின் அன்னையார் யார்? அவரின் திருப்பெயர் யாது? மன்னருக்கும் அவருக்கும் உறவின் முதல் முடிச்சு விழுந்தது எப்படி?

**வந்தவர்:** கூகையாரே! அந்தப்புரத்தில் ஆயிரம் அழகிகள் இருந்தாலும் யாரும்

அறியாமல் சில ரகசியப் பிணைப்புகளை ஏற்படுத்திக்கொள்வது மன்னர்களின் வழக்கம்தானே. நிலவு ஓய்வெடுத்துக் கொள்ளும் இரவுப் பொழுதுகளில் மன்னர் மாறுவேடம் புனைந்து நகர்வலங்கள் சென்றபோது ஏற்பட்ட தொடுப்பு இது.

**முல்லையூரார்:** நகர்வலம் மக்கள் நலமறிய என்றல்லவா அறிந்து வைத்திருந்தேன்.

**வந்தவர்:** எல்லா மன்னர்களும் பொற்கை பாண்டியர்கள் இல்லை நண்பரே! மன்னர்களுக்கு நாட்டில் மழை வருவதைச் சொல்வதற்கு மட்டுமில்லை; எந்தெந்தக் குலத்தில் எந்தெந்தப் பெண்கள் பூப்பெய்தி மன்னனின் ருசிக்கேற்றாற் போல் மலர்ந்திருக்கிறார்கள் என்பதையும் சொல்வதற்குத்தான் அமைச்சர்கள்.



எல்லா மன்னர்களும் பொற்கை பாண்டியர்கள் இல்லை நண்பரே! மன்னர்களுக்கு நாட்டில் மழை வருவதைச் சொல்வதற்கு மட்டுமில்லை அமைச்சர்கள்.

**முல்லை:** ஆஹா... அமைச்சர்கள் எத்துணை மகத்தான பணிகளைச் செய்கிறார்கள்.

**வந்தவர்:** கூகையாரே! உங்கள் நண்பர் குறும்புக்காரர் போலத் தெரிகிறது.

**கூகை:** ஆம் அமைச்சரே! கொஞ்சம் சுதந்திரமானவரும் கூட. அமைச்சரே நீங்கள் என் சந்தேகத்தை இன்னும் தெளிவாக்கவில்லை.

**வந்தவர்:** உம்...ம்... சொல்கிறேன். இளஞ்செழியனின் தாயார் பிரான் மலையூர் உட்கோட்டத்திலுள்ள பிச்சியூரைச் சேர்ந்தவர். பெயர் குழலி.

*(கூகையார் சிந்தனையோடு முணுமுணுக்கிறார்)*

பிரான்மலை... பிச்சியூர்... குழலி... *(அவர் முகத்தில் ஏதோ அறிந்து விட்டதான ஒளி பரவுகிறது. மீண்டும் முணுமுணுக்கிறார்)* நினைத்தேன். நினைத்தேன். *(வலது உள்ளங்கையைக் குவித்து இடது கையில் குத்திக் கொண்டே)* இளஞ்செழியனின் அழகையும் நிறத்தையும் பார்த்தபோதே நினைத்தேன். அமைச்சரே தாங்கள் குறிப்பிடும் குழலியார் கணிகையர் குலம் அல்லவா?

**வந்தவர்:** ஆமாம்... மன்னர் தொட்ட பின்பு குலத்தொழிலை விட்டவள்.

**கூகையார்:** இருந்தாலும்...

**வந்தவர்:** இளஞ்செழியன் கல்வி கேள்விகளில் வல்லவன். வாட் சண்டை, வேற்போர், மல்யுத்தம் போன்ற கலைகளில் தேர்ச்சி பெற்றவன்.

**கூகையார்:** இருந்தாலும்...

**வந்தவர்:** இளஞ்செழியன் நமது விருப்பத்துக்கேற்ப ஆட்சி புரிவான்.

**கூகையார்:** அப்படியானால் சரி... இருந்தாலும் சுத்தரத்தமாக இல்லையே என்று யோசிக்கிறேன்.

**வந்தவர்:** ரத்தத்தைச் சுத்தப்படுத்தும் வேலைகளைப் புலவர்கள் பார்த்துக் கொள்வார்கள் கூகையாரே!

**கூகையார்:** *(குழப்பத்துடன்)* என்ன சொல்கிறீர்கள்?

**(தொடரும்)**

அருள்வாக்கு

# பிராயச்சித்தம்

நமக்குத் தீங்கு செய்கிற பிராணிகளுக்குக்கூட நாம் பதிலுக்குத் தீங்கு செய்யக் கூடாது. இங்கேயோ தீங்கு செய்பவற்றோடு ஒரு தீங்கும் இழைக்காத பிராணிகளையும் நாம் இத்தனை ஹிம்சைக்கு ஆளாக்க நேருகிறது. யோசித்துப் பார்த்தால் இத்தனை ஜீவராசிகளுக்கு இத்தனை உபத்திர வத்தை உண்டாக்கிக் கொண்டு வயிற்றை வளர்க் கிறோமே என்று துக்கம் உண்டாகிறது. ஆனால் இதெல்லாம் நம்மால் தவிர்க்க முடியாத விஷயங்கள். நாம் வேண்டுமென்று இவற்றைக் கொல்ல வில்லை. எனவே நம்மை மீறிச் செய்கிற இந்தத் தோஷங்களுக்குப் பிராயச்சித்தம் உண்டு. அப்படிச் செய்கிற பிராயச்சித் தமே 'வைசுவ தேவம்' என்பது.

'நம்மால் ஹிம்சைக்கு ஆளான ஜீவராசிகளுக்கெல்லாம் நல்ல கதி கிடைக்க வேண்டும். நம்மைப் பகவான் மன்னிக்க வேண்டும்' என்ற எண்ணத்துடன், எல்லா உயிர்களின் திருப்திக் காகவும் வைசுவ தேவ பலி கொடுக்கப்படுகிறது. இந்த விசு வத்தில் எவ்வளவு பிராணிகள் உண்டோ, நாய், காக்கை, சமூகப் பிரஷ்டன் உட்பட எல்லோருக்கும் எல்லாவற்றுக்கும் வைசுவ தேவத்தில் பலி உண்டு. வைசுவ தேவம் செய்தால் நாம் செய்கிற பல தோஷங்கள் விலகும். பல உயிர்களுக்கு ஆகாரம் கிடைக் கும்.

வைசுவ தேவம் என்பது தேவ யக்ஞம், மனுஷ யக்ஞம் (விருந்தோம்பல்) முதலான ஐந்து யக்ஞங்களில் ஒன்று.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**





# பிச்சைப் பாத்திரம் ஏந்தி வந்தேன்...

**தாம்பரம் டு கடற்கரை செல்லும் ரயிலில் சந்தித்த ஒரு பார்வையற்றவரின் வாழ்க்கைப் பயணக் குறிப்பு...**

என் பேரு சண்முகம். மதுரை மாவட்டம் செல்லூரில் பிறந்தேன். பெரிய குடும்பம். ஆறாவது பிள்ளை. என்கூடப் பிறந்தவங்க மொத்தம் பதிமூணு பேர். ரெண்டு வயசுல உடம்பு சரியில்லாம எவ்வளவோ வைத்தியம் செய்தும் பார்வை போயிடுச்சு. சின்ன வயசுல பார்வை தெரிந்த பசங்களோடு ஓடிப்பிடித்து விளையாடுவேன். அப்புறமா அரசியல், ஊர்வலம்னு வாழ்க்கை திசைமாறிப் போச்சு. தேர்தல் சமயத்துல அரசியல் கட்சிகளுக்காகப் பிரசாரம் செய்வேன்.

வீட்டுல உள்ளவங்களுக்கு எவ்வளவு நாள்தான் பாரமாய் இருக்கறது? இருபத்தொம்பதாவது வயசுல வீட்டை விட்டு வெளியேறி சென்னைக்கு ரயில் ஏறினேன். அதே வண்டியில எங்க செல்லூர்காரர் இருந்தாரு. என்னைப் பார்த்து 'எங்கடா போறே?'ன்னார். விஷயத்தைச் சொன்னேன். வண்டி சென்னைக்கு வந்ததும் அவரு எக்மோருல இறங்கினாரு. என்னையும் இறங்கச் சொன்னாரு. சாப்பாடு வாங்கியாந்து தந்துட்டு 25 பைசா கையில திணிச்சுட்டு கிளம்பிட்டாரு. சாப்பிட்டேன். முன்னால டக் டக்னு ஏதோ சப்தம் கேட்டுச்சு. பெரிசா எடுத்துக்கலை. தூக்கம் வந்தது தூங்கிட்டேன். ரொம்ப நேரம் கழிச்சி முழிச்சேன். முன்னாடி கேட்கிற சப்தம் நிக்கலை. தொடர்ந்து கேட்டுக்கிட்டே இருந்திச்சு. இரண்டு கையையும் நீட்டி தடவிப் பார்த்தேன். கை முழுக்க காசா தட்டுப்பட்டுச்சு. இதை நானா அமைச்சுக்கலை. மத்தவங்கதான் அமைச்சுத் தந்தாங்க.

எக்மோர்ல முதல் நாள் சேர்ந்த மொத்தக் காசையும் கூட்டிப் பார்த்தேன். 150 ருபா தேறிச்சு.

ஒரே சமயத்துல இவ்வளவு பணத்தை இதுவரைக்கும் பார்க்கலை. புதுசா வந்த ஊர்ல என்ன வேலை தேடுறதுன்னும் தெரியலை. இதுதான் தொழில்னு முடிவெடுத்தேன்.

கிடைக்கிற சில்லறை காசுகளை

நோட்டா மாத்தி தலைக்கு வைச்சுத் தூங்குவேன். காலையில பார்த்தா காணாம போயிருக்கும். தினமும் இப்படி நடக்கும். தாங்க முடியாம அழுவேன். அதப் பார்த்து தங்க இடம் கொடுத்த ஒரு பாட்டியம்மா... 'கல்யாணம் பண்ணிக்க... தனியா குடித்தனம் போனா நிறைய சேமிக்கலாம்'னு அறிவுரை சொன்னாங்க. அவங்களே பொண்ணு பார்த்தாங்க. கோயம்புத்தூர் பொண்ணு. எக்மோருக்கே என்னைத் தேடி வந்துச்சு. லெட்சுமின்னு பேரு. உங்க

# கதையல்ல நிஜம்

## ஜானகிராமன்

கூடவே தங்கிக்கவான்னு கேட்டுச்சு. சம்மதிச்சேன். வேளாங்கண்ணி போய் ஜெபம் பண்ணி கல்யாணம் பண்ணிக்கிட்டோம். ஊருக்குப் போய் அப்பா அம்மா கிட்ட காமிச்சேன். ரொம்ப சந்தோஷப்பட்டாங்க. மறுபடியும் சென்னைக்கு வந்து ஜாபர்கான்பேட்டையில் வீடு எடுத்துத் தங்கினோம்.

'ஜேல் ஞானஸ்நானம் எடுத்தோம். பிரசங்கம் இருதயத்தைத் தொட்டது. அன்னிலருந்து நம்பிக்கையோட ஜெபம் பண்றோம்.

**ஒரே சமயத்துல இவ்வளவு பணத்தை இதுவரைக்கும் பார்க்கலை. புதுசா வந்த ஊர்ல என்ன வேலை தேடுறதுன்னும் தெரியலை. இதுதான் தொழில்னு முடிவெடுத்தேன்.**

ஒருத்தர்கிட்டயும் கடன் இல்லாத அளவுக்கு மீட்சி வேண்டும். வாடகை கொடுக்காம வீடு வேண்டும். இவ்வளவு தான் கடவுள்கிட்ட வேண்டிக் காத்திருக்கோம். மத்தவங்க பிரார்த்தனைக்கும் அவரு செவி சாய்க்கணுமில்ல? ●



''அடப்பாவி... கொல்ல வரும் எதிரி மன்னன்னு நினைச்சேன். முதல்லேயே திருடன்னு சொல்லியிருக்கலாமில்ல...''

''சொல்லியிருந்தா...''

''ரெண்டுபேருமே இவ்வளவு தூரம் ஓடியிருக்க வேண்டியதில்லை. முதல்லயே கிரீடத்தைக் கழட்டிக் கொடுத்திருப்பேன்.''

- எம்.மிக்கேல்ராஜ், விருதுநகர்



''இந்தத் தேர்தல்ல எனக்கு மட்டும் எம்.பி. ஸீட் கிடைச்சுச்சின்னா...!''

''என்ன பண்ணுவீங்க?''

''அடுத்த எலெக்ஷனுக்குள்ள 'அனில் அம்பானி'யையெல்லாம் முந்திக் காட்டுவேன்ல..!''

- உ.குணசீலபாண்டியன்,
இராஜபாளையம்



''படம் எப்போ ரிலீஸ் ஆகும்?''

''டைரக்டர் ரிலீஸ் ஆனதும்...''

- எ.மோகன், பூலங்கல்

# ஒரு ஷட்!



''நீ லவ் பண்ணிய அந்த இளம் விஞ்ஞானியோட ஓடிப் போனியே... அப்புறம் ஏன் இரண்டு பேரும் திரும்பி வந்துட்டீங்க?''

''அது சோதனை ஓட்டம்னு சொல்லித் தொலைச்சுட்டார்டி!''

- அதிரை புகாரி,
அதிராம்பட்டினம்



''கல்யாணமாகி பத்து வருஷமாச்சு. இப்பவும் நான் எதைச் சொன்னாலும் நீ ஒத்துக்கறதேயில்லை.''

''தப்புங்க... பதினொரு வருஷமாச்சு.''

-ஜி.லட்சுமிபதி,
ஆதம்பாக்கம்

''உங்க டாக்டர் தெய்வம் மாதிரியா, எப்படி?''

''ரத்தப் பரிசோதனை, எக்ஸ்ரே பரிசோதனை, ஸ்கேன் பரிசோதனைன்னு நிறைய சோதனைகள் செய்வார்!''

- வெ.சீதாராமன், சென்னை - 5



எந்த மாணாக்கனுக்கு எந்தத் துறையில் கல்வி பயில ஆசையிருக்கிறதோ, அந்தத் துறையில் பயிற்சிபெற அவனுக்கு இடமும் வசதியும் கிடைக்கச் செய்யவேண்டும்



# படிப்பதற்கு



இந்த வேடிக்கையைக் கேளுங்கள். இந்தியாவிலிருந்து, சென்னை மாகாணத்திலிருந்து, ஒரு தகுதி வாய்ந்த இளைஞன் இங்கிலாந்தில் மேற்படிப்புக்குச் செல்ல விரும்பினால் கொஞ்சம் முயற்சியின் பேரில் அங்கே அவனுக்கு இடம் கிடைத்து விடுகிறது. உலகப் பிரசித்தி பெற்ற ஆக்ஸ்போர்டு, கேம்ப்ரிட்ஜ் சர்வகலா சாலைகளில் இடம் கிடைக்கிறது. வைத்திய கலா சாலைகளில் இடம் கிடைக்கிறது. பாரிஸ்டர் பயிற்சி பெறுவதற்கு இடம் கிடைக்கிறது. என்ஜினியரிங் பயிற்சிக்கு இடம் கிடைக்கிறது.

இங்கிலாந்தில் படிப்பதற்கு இடம் கிடைப்பது போலவே அமெரிக்காவிலும் இடம் கிடைக்கிறது. அமெரிக்கக் கோடீசுவரர்களின் புதல்வர்கள் படிக்கும் ஹார்வர்டு சர்வ கலாசாலையில் இந்திய மாணாக்கர்கள் இடம் சம்பாதித்துக் கொள்ளலாம்.

ஆனால், சென்னை மாகாணத்தில் பிறந்த இளைஞன் ஒருவன் சென்னை மாகாணத்தில் உள்ள என்ஜினியரிங் கலாசாலையிலோ வைத்திய சாலையிலோ இடம் பெறுதல் அரிது! மானிடராய்ப் பிறத்தலையும் மற்றும் ஔவையார் கூறியிருக்கும் எல்லா அரிய விஷயங்களையும் விட அரிதரிது!!

சென்ற வாரத்தில் எஸ்.எஸ்.எல்.சி. பரீட்சை முடிவுகள் வெளியாகியிருக்கின்றன. மொத்தம் பரீட்சைக்குப் போனவர்கள் ஐம்பத்து நாலாயிரத்துச் சொச்சம் பேர். பரீட்சையில் தேறிச் சர்வகலாசாலையில் சேருவதற்குத் தகுதி வாய்ந்தவர்கள் என்று அறிவிக்கப்பட்டிருப்பவர்கள் சுமார் இருபத்தாறாயிரம் பேர். இந்த இருபத்தாறாயிரம் இளைஞர்களும் (பாலர்கள் என்றுகூடச் சொல்லலாம்) மேலே

அமரர் கல்கி



# ஓர் இடம்!

* படம் : ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

என்ன செய்யப் போகிறார்கள்? ஆயிரக்கணக்கானவர்கள் கலா சாலைகளில் இடம் பிடிக்கும் முயற்சி தொடங்குவார்கள். 'நல்ல காலேஜ்' என்று பெயர் வாங்கிய காலேஜுகளுக்கு முதலில் ஓடுவார்கள். அத்தகைய காலேஜுக்கு ஆயிரக்கணக்கில் விண்ணப் பங்கள் வந்து குவியும். காலேஜ் அதிகாரி கள், என்ன செய்ய முடியும்? சென்ற வருஷத்தில், ''அறுபது மார்க் வாங்கியவர் களைத்தான் சேர்ப்போம்'' என்று சொன்னவர்கள், இந்த வருஷத்தில், ''எழுபது மார்க் வாங்கியவர்களைத்தான் சேர்ப்போம்'' என்பார்கள். எழுபது மார்க் வரம்பை ஒரு வேளை எண்பது மார்க்காகச் செய்தாலும் செய்து விடுவார்கள்.

குறைவான மார்க் வாங்கிய பிள்ளைகள் மற்ற காலேஜுகளுக்கு ஓடுவார்கள். ஒவ்வொரு காலேஜிலும் வடிகட்டல் வேலை நடைபெறும். இதற்கிடையில் பெற்றோர்கள் அங்குமிங்கும் பறந்து விழுந்து ஓடுவார்கள். சிபாரிசுகள் பிடிக் கவும் சிபாரிசுக் கடிதங்கள் சம்பாதிக்கவுந் தான்! இந்த மாதத்தில் காலேஜுக் கமிட்டி அங்கத்தினர்களுக்கும் கலாசாலைகளின் பிரின்ஸிபால்களுக்கும் தலைகால் தெரி யாது! ''அது எப்படி சார்? அறுபத்தைந்து

மார்க் வாங்கிய பையனைச் சேர்க்காமல் நாற்பத்திரண்டு மார்க் வாங்கியவனைச் சேர்க்க முடியும்'' என்பார் பிரின்ஸிபால். ''எல்லாம் சேர்க்கலாம், சார்! நீங்கள் மனது வைத்தால் சேர்க்கலாம்!'' என்பார் சிபாரிசுக்கு வந்தவர்.

இப்படியாக வருகிற ஒரு மாத காலம் ''சர்வம் சிபார்சு மயம் ஜகத்''தாக விளங்கும். மாதம் முடிந்த பிறகு பார்த்தால், எஸ்.எஸ்.எல்.சி. தேறிய இருபத்தாறாயிரம் மாணாக்கர்களில் சுமார் ஐயாயிரம் பேருக்குத்தான் காலேஜுகளில் இடம் கிடைத்திருக்கும். மற்ற இருபத்தோராயிரம் பேர் என்ன செய்வார்கள்? சிலர் தலையில் கை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார்கள். சிலர் ஜாதகத்தை எடுத்துப் பார்ப்பார்கள். சிலர் உத்தியோக வேட்டை தொடங்குவார்கள்.

ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் படிக்க விரும்பும் மாணவர்களுக்கு ''காலேஜுகளில் இடம் இல்லை'' என்ற பேச்சே கிடையாது.

அந்த நிலைமை சென்னை மாகாணத்திலும் ஏற்பட வேண்டும். எந்த மாணாக்கனுக்கு எந்தத் துறையில் கல்வி பயில ஆசையிருக்கிறதோ, அந்தத் துறையில் பயிற்சிபெற அவனுக்கு இடமும் வசதியும் கிடைக்கச் செய்ய வேண்டும்.

சாதிக்க முடியாத காரியமல்ல; சர்க்காரும் கல்வி இலாகாவும் சர்வ கலா சாலைகளும் சமூகத் தலைவர்களும் ஒத்துழைத்து முயன்றால் நிச்சயம் வெற்றி பெறலாம்.

சுதந்திர இந்தியாவை உலகத்தில் முதன்மையான தேசங்களில் ஒன்றாகச் செய்வதற்கு ஆயிரக்கணக்கான என்ஜினியர்களும் டாக்டர்களும் வேண்டும். சென்னை மாகாணம் ஏன் அவர்களை உற்பத்தி செய்து கொடுத்துப் புகழ் அடையக் கூடாது?

**- கல்கி 13.6.1948**



# மீண்டும் வேர்ப்பற்று

**சா**கித்ய அகாதமி விருது பெற்ற எழுத்தாளர் இந்திரா பார்த்தசாரதி எழுதிய நாவல்களில் குறிப்பிடத்தக்கது 'வேர்ப்பற்று'. கணையாழி இதழில் வெளியாகிப் பரவலாகப் பேசப்பட்ட இந்த நாவல் அவரது சுயசரிதையின் ஒரு பகுதி என்றே குறிப்பிடப்படுகிறது. கும்பகோணம் மற்றும் அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் படித்த காலகட்டத்தில் தமக்கு ஏற்பட்ட அனுபவங்களின் பதிவுகளாக எழுதியிருந்தார் இ.பா. வரிக்கு வரி மென்முறுவலும் எள்ளலும் கொண்ட நாவல். இதன் இரண்டாம் பாகம் 'யுகமாயினி' இலக்கிய மாத இதழில் மே மாதம் முதல் தொடங்கவுள்ளது. ''எத்தனையோ இலக்கியப் பத்திரிகைகள் இ.பா.வின் எழுத்துக்காகக் காத்திருக்கையில் யுகமாயினிக்கு எழுதச் சம்மதித்தது எங்களுக்குக் கிடைத்த வரம்'' என்று குஷியுடன் குதிக்கிறார் அதன் ஆசிரியர் சித்தன்.

- ராஜ்

**கல்கி 22.3.09 இதழில் வெளியான கவிஞர் தேவேந்திர பூபதியின் 'ஹைகூ' பற்றிய கருத்துக்கு நிறைய எதிர்ப்புக் குரல்கள் நமது கவனத்துக்கு வந்தன. அவற்றில் மு.முருகேஷ் அவர்களின் எதிர்வினை இங்கே...**




# கரைக்கு வாங்க கவிஞரே!

**வா**சிப்பின் எல்லையைச் சற்றும் விரிவு படுத்திக்கொள்ளாமல், சட்டென பலரின் கவனத்தை ஈர்ப்பதற்காக மட்டுமே சொல்லப்படுகிற செய்திகளில் ஒன்றுதான் - 'தமிழில் இன்னும் ஒரு ஹைக்கூ கூட எழுதப் படவில்லை' என்பது.

தமிழில் ஹைக்கூ முதல் நூல் 1984-ல் வெளிவந்து, இன்றைக்கு 25 ஆண்டுகள் கடந்தோடிவிட்ட நிலையில் 200-க்கும் மேற்பட்ட ஹைக்கூ கவிதை நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றில் எத்தனை நூல்களை தேவேந்திர பூபதி வாசித்திருப்பார்?

ஜப்பானைக் தலைமையிடமாகக் கொண்டு செயல்படும் 'உலக ஹைக்கூ கிளப்' (World Haiku Club) தனது ஒன்பதாவது உலக ஹைக்கூ விழாவை, சென்ற ஆண்டு இந்தியாவிலேயே முதன்முறையாக பெங்களூருவில் நடத்தியது. அதில் தமிழில் ஹைக்கூ எழுதுகிறவர்கள் சார்பாக நான் கலந்து கொண்டேன்.

உலக ஹைக்கூ கிளப்பின் தலைவர் ஓவியக் கவிஞர் சுசுமு டகி குச்சி ஆங்கில மொழி பெயர்ப்பின் வழி தமிழ் ஹைக்கூ கவிதைகளை வாசிக்கக் கேட்டு பெரிதும் மகிழ்ந்து பாராட்டினார்.

'இந்திய மொழிகளிலேயே தமிழில் தான் ஹைக்கூ கவிதைகள் சிறப்பாக எழுதப்படுகின்றன' என்கிற கருத்தையே பலரும் பதிவு செய்தனர்.

தமிழ் ஹைக்கூ கவிதைகள் ஆங்கிலம், மலையாளம், இந்தி ஆகிய மொழிகளில் இன்று மொழியாக்கம் செய்யப்படுகின்றன. பல்கலைக்கழக ஆய்வு மாணவர்களால் ஆய்வு செய்யப்படுகின்றன. பல்கலைக் கழகப் பாடத்திட்டத்திலும் இடம் பெற்றுள்ளன.

'தலைமுறைக் கோபம்
அடிக்க அடிக்க
அதிரும் பறை'

- என்றெழுதிய மித்ராவின் ஹைக்கூவிலிருந்து வீரியம் பெற்று இன்னும் இன்னுமாய் திசைகள் அதிர இளைய கவிஞர்கள் எழுதி வருகிறார்கள்.

வாழ்வின் அனுபவத்திலிருந்து ஹைக்கூ கவிஞர்கள் முத்தெடுப்பதை அறியாமல், கரைக்கு வராமலேயே கிளிஞ்சலைப் பழிக்கும் கவிஞரின் அறியாமையை என்னவென்பது?

**- மு.முருகேஷ்**

# ரிசல்ட் வரப் போகுது!!

'**நா**ன் பாஸாயிட ணும், நான் பாஸாயிடணும் கடவுளே நான் எல்லா சப்ஜெக்டிலும் பாஸாயிடணும்.' சினிமா பார்த்துக் கொண் டிருந்த நான் திடீர் என மனத்துக்குள் புலம்ப ஆரம்பித்தேன். அதிகாலை விழிப்பு கூட எனக்கு இப்படியே ஆரம்பிக்கிறது.

நான் நினைக்கிற பாட்டு கேட்டால் பாஸ்... நினைத்துக்கொண்டு கண்மூடிக் கொள்வேன். தினமும் கேட்கும் அந்தப் பாட்டு அன்று மட்டும் கேட்கவே கேட் காது.

நான் பத்து எண்ணுவதற்குள் காக்கா கத்தினா பாஸ் (என்னப்பா இது? காக்காவை எல்லாம் நாடு கடத்திட்டாங்களா? இதோட நூத்தி இருபது தடவை ஒன்பது வரை எண்ணிட்டேன்).

அரைமணி நேரத்துக்குள் பல்லி கத் தினா பாஸ்.. (ஐந்து நிமிடத்துக்கு ஒருமுறை பல்லி சத்தம் கேட்கும் மாட்டுக் கொட்டகை யில் ஆறு மணி நேரம் காத்திருந்தேன். ம்ஹூம்... பல்லியெல்லாம் மௌன விரதமா என்ன?)

அக்காவோ, அம்மாவோ பெருக்கிக் கொண்டிருக்கும் பூந்துடைப்பம் அல்லது தென்னந்துடைப்பத்தின் ஒரு கொத்து குச்சிகளை உருவிக் கொண்டு, இதை இரட்டை இரட்டையா எண்ணினா, மிச்சம் ஒரு குச்சி இருந்தால் பாஸ்... (எத்தனை முறை எண்ணியும் இரட்டைப் படையில் முடிந்த குச்சிகள் என்னைப் பார்த்து ஹி ஹி என்று சிரித்தன).

நாளைக்கு ரிசல்ட். பயபீதியில் சாப்பிட முடியவில்லை. அது பரவாயில்லைங்க. சைட் கூட அடிக்க முடியலை. ஐய்யோ நாளைக்கு இவர்கள் முகங்களில் எப்படி முழிப்போம்? ஐய்யோ அதுக்காக வேணும் பாஸாயிடணும் சாமி. எல்லாப் பாடத்திலும் நான் பாஸாயிடணும்.

''ஏய் பாபு நாளைக்கு உனக்கு ரிசல்ட் இல்ல?'' எதிர் வீட்டு விமலா கேட்ட போது, ''போடி...'' என எரிச்சல் வந்தது. சாதாரணமாக பேச, ஏன் பார்க்கக் கூட பிகுபண்ணும் பிகர் இன்றைக்கு எதிர் கொண்டு வந்து விசாரிக்கிறது.

என் அவஸ்தையை ரசித்து அவள் சிரிப்பதைக் கண்டு சடாரென விலகினேன். கடவுளே என்னை பாஸாக்கி விட்டுடு. வேண்டிக்கிட்டதெல்லாம் செஞ்சுடறேன். கடவுளுடன் நான் பேரம் பேச ஆரம் பித்தபோது...

எதிரே சைக்கிளில் புவனா வந்தாள். என் கனவு தேவதைகளின் தலைவி. என் னைத்தான் பார்க்கிறாள். என் அருகில் வந்ததும் சைக்கிளை பிரேக் போட்டாள். எனக்கு எல்லாம் மறந்து போனது. ''பாபு... நாளைக்கு ரிசல்ட். ஈமெயில்ல பார்க்கலா மாம். ஆனால், வீட்ல அம்மாவுக்கு உடம்பு முடியலை. நான் அம்மாவைப் பார்த்துக் கணும். இந்தா.. இது என் நம்பர். உன் ரிசல்ட்டைப் பார்க்கும்போது எனக்கும் பார்த்துட்டு வருவியா ப்ளீஸ்...''

'கேட்பது கனவா... இவ்ளோ அழகான பொண்ணு அவ பரீட்சை எண்ணைக் கொடுத்து என்னை ரிசல்ட் பார்த்துட்டு வரச் சொல்றா. கடவுளே இவளும் பாஸாகி இருக்கணும். அடச்சே... இவ எல்லாம் பாஸாயிடுவா. ஸ்கூல் ஃபர்ஸ்ட் கூட வருவா. நான்தான். எனக்குத்தான் பயம்மா

இருக்கு. நான் பாஸாயிடணும், நான் பாஸா யிடணும், பாஸாயிடணும்.'

''நம்ம கிளாசிலேயே நல்ல பையன் நீதான். அதான் உன்கிட்ட இந்த உதவி கேட்டேன். சரி நாளைக்கு என் ரிசல்ட்டைச் சொல்லு'' என்றபடி சைக்கிளை மிதித்தாள்.

ஜாதி மல்லிகை.
சைக்கிள் தேவதை
உதவி கேட்கிறாள்
உறக்கக் கனவா இது...?

எனக்குள் கவிதை பூக்க, அடக்கடவுளே, நான் பாஸாயிடணும், பாஸாயிடணும், பாஸாயிடணும்.

தூரத்துக் குட்டிச்சுவரில் என் தோழர்கள். ''ஏய் மச்சி வாடா'' என எனக்கும் சிம்மாசனத்தில் உட்கார இடம்கொடுத்தனர்.






''மாமு நாளைக்கு... என்னடா ப்ளான்?'' சுரேஷ் கேட்க, ''பாஸாயிட்டா கொண்டாடிட வேண்டியதுதான்'' சேகர் உற்சாகமாய் முழங்க,

எனக்குத் திகைப்பாக இருந்தது. இவர்களுக்கு எல்லாம் என்னைப் போன்ற பயமே இல்லையா? இவர்கள் மனம் பாஸாயிடணும் என்ற மந்திரத்தை உருப் போடாதா? ''ஏய், ரிசல்ட் பத்தி பயமே இல்லையாப்பா?'' என்ற என்னை எல்லோரும் வினோதமாய்ப் பார்த்தனர்.

''ஜாண் புள்ளையானாலும் ஆண் புள்ளை - பயப்படக் கூடாது அப்பு'' நெல்சன் வீரமாய் கர்ஜிக்க,

''பயம்மா... நெவர், மார்ச் போனா ஜூலை இருக்கு'' வசந்த மிக இயல்பாய்க் கூற,

''தோல்விகள் வெற்றியின் படிக்கட்டுகள் கேள்விப்பட்டதில்லை நீ? நம்ம கணக்கு சார் சொல்வாரே'' - தினமும் கணித ஆசிரியரிடம் குட்டு வாங்கும் செந்தில் கூற,

''ஹே பச்சப் புள்ள பயப்படுது பாரு. டேய், இனிமே நீ எங்க குழுவுக்கு வேணாண்டா. போ, எறங்கு, இடத்தைக் காலி பண்ணு.'' என் சக தோழர்களே என்னைக் கேலி பேசிச் சிரிக்க,

'கடவுளே, நான் பாஸாயிடணும்.' மனத்துக்குள் மந்திரமாய் ஜெபித்தபடி குட்டைச் சுவரில் இருந்து இறங்கி வீடு நோக்கி நடந்தேன்.

இரவு முழுவதும் கண்கள் மூட மறுத்தன. பயம் பந்து, பந்தாய் அடிவயிற்றில் இருந்து உருண்டு தொண்டையை அடைத்தது.

''ஏம்பா, என்ன பண்ணுது?'' அம்மா என் அவஸ்தை கவனித்து அருகில் வந்து தலைகோதினாள்.

''பயம்மா இருக்கும்மா'' உடைந்த குரலில் கூற,

''அடடே! இதுக்கா இப்படி இருக்கே. பரவாயில்ல விடு. ரிசல்ட் எப்படி வந்தாலும் பார்த்துக்கலாம் வா கண்ணு, சாப்பிடலாம்'' என் தோள் பற்றி எழுப்பினார் தந்தை.

''உனக்காக சாமிகிட்ட வேண்டிக்கிட்டு இருக்கேன். எதுக்கும் கவலைப்படாதே'' அக்கா என் நெற்றியில் விபூதி பூசினாள்.

வேரோடு பிடுங்கப்பட்ட மரம், மீண்டும் குழிக்குள் நடப்பட்டதைப் போல் நிம்மதி மனத்தில் பரவ, மெல்லத் தூங்கிப் போனேன்.

ஐந்து பாடங்களிலும் எழுபதுக்கும் அதிக மதிப்பெண்கள் எடுத்து நான் தேர்ச்சி பெற்றதைக் கனிவி கூற,

'ஹா... நான் பாஸாயிட்டேன். கடவுளே நன்றி' அடிவயிற்றிலிருந்து பீறிட்ட சந்தோஷ அழுகையோடு நன்றி சொன்னேன். புவனாவும் பாஸ். நான் நினைத்தது போலவே பள்ளியின் முதல் மாணவியும் அவள்தான்.

என் (குட்டிச்சுவர்) தோழர்கள் அனைவரும் ஜூலை மாத மறுதேர்வுக்கு விண்ணப்பித்து இருக்கின்றனர். கடவுளே அதில் அவர்களும் பாஸாகிடணும். ●

# காதைக் கொடுங்க




லி வாலைப் பிடித்த கதையாக, போராட்டத்தைத் தொடர்ந்து கொண்டிருந்த வழக்கறிஞர்கள் மீண்டும் பணிக்குத் திரும்பும்விதமாக உயர்நீதிமன்றத் தீர்ப்பு அமைந்துவிட்டது. ''இரண்டு காவல் உயர் அதிகாரிகளைப் பணிநீக்கம் செய்ய உத்தரவிட்டபோதும், நாளை உச்சநீதிமன்றத்துக்குப் போய் அவர்கள் இந்தத் தீர்ப்புக்குத் தடை வாங்கி விடுவார்கள் என்று தெரியும். எங்கள் கோபம் இன்னும் தணியவில்லை'' என்றார் சங்கத்தின் முக்கியப் பிரமுகர் ஒருவர். இந்த நிலையில், 'மாவட்ட மற்றும் ஒன்றிய அளவில் வழக்கறிஞர்கள் குழு அமைத்து, கறுப்புக் கோட்டுடன், ஆளும் தி.மு.க.வுக்கு எதிராக மட்டும் பிரசாரம் செய்தால் என்ன?' என்று சில வழக்கறிஞர்கள் கேள்வி எழுப்பியுள்ளனர். இதைத் தீவிரமாகப் பரிசிலித்து வருகிறது வழக்கறிஞர்கள் போராட்டக் குழு.





## கிருஷ்ணசாமிக்கு தென்காசி?




திய தமிழகம் டாக்டர் கிருஷ்ணசாமி, இப்போது ஜெயலலிதாவின் அன்புக்குப் பாத்திரமாகியிருக்கிறார். இந்த நெருக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு தென்காசி தொகுதியை எப்படியும் பெற்று விடுவதென்று மல்லுக்கட்டுகிறார் கிருஷ்ணசாமி. ஆனால் கிருஷ்ணசாமிக்கு ஸீட் கொடுத்தால் முக்குலத்தோர்களிடையே அது தவறான தகவலைக் கொண்டு செல்லும் என்று அ.இ.அ.தி.மு.க. சீனியர் பிரமுகர்கள் பயப்படுகிறார்கள். இதன் காரணமாக, குறைந்தது ஐந்து தொகுதிகளில் பாதிப்பு வரும் என்று அவர்கள் கருதுகிறார்கள். ஆனால் அம்மாவோ, ''நம்மிடம் மூவேந்தர் முன்னேற்றக் கழகம் சேதுராமன் மற்றும் ஸ்ரீதர் வாண்டையார் இருக்கிறார்கள். அவர்கள் முக்குலத்தோர் விவகாரத்தைக் கவனித்துக் கொள்வார்கள். மேலும் சசிகலா என்னுடன் இருக்கும் வரை எனக்குத்தான் முக்குலத்தோர் ஆதரவு'' என்று உறுதியாகக் கூறுகிறாராம்.

– ஸ்ரீநி




# உள்ளே ஒரு குரல்!

''சிலர் தனக்குத் தானே பேசிக் கொள்வதைப் பார்த்து, அவர்களுக்குப் பைத்தியம் என்று சொல்லிவிடுகிறோம். ஆனால், அவர்களுடைய காதுகளில் யாரோ தொடர்ந்து ஏதோ பேசிக் கொண்டிருப்பது போல இருக்கும், அந்த 'யாரோ'வுடன் இவர்களும் உரையாடிக் கொண்டிருப்பார்கள். உண்மையில் அவர்கள் 'ஸ்கிசோ-ஃப்ரேனியா' என்கிற மனச் சிதைவு பாதிப்புக்குள்ளானவர்கள்'' என்கிறார் அண்மையில் வெள்ளி விழா கொண்டாடிய மனச்சிதைவு சிகிச்சை மற்றும் ஆராய்ச்சி மையமான ஸ்கார்பின் இயக்குனர் டாக்டர் தாரா.

சிலருக்கு இது சாதாரண உரையாடலாக இல்லாமல், உள்ளேயிருந்து கட்டளைகள் வரும். அதை சீரியசாக எடுத்துக் கொண்டு நிறைவேற்றிவிடுவார்கள். முப்பது வயதுப் பெண்மணி ஒருவர், அடிக்கடி, யாரோ தம்மிடம், ''நீ வாழ்ந்து யாருக்கு என்ன பயன்? பேசாமல் கிணற்றில் குதித்துத் தற்கொலை செய்துகொள்!'' என்று சொல்வதாகச் சொல்லிக் கொண்டிருந்தவர், திடீரென்று ஒருநாள் கிணற்றில் குதித்து இறந்து விட்டாராம்.

''இன்று உலகிலுள்ள மொத்த மக்கள் தொகையில் ஒரு சதவிகிதத்தினர் மனநல பாதிப்புக்கு உள்ளானவர்கள் என்று புள்ளி விவரம் பயமுறுத்துகிறது. கவுன்சிலிங் மற்றும் மாத்திரை மூலம் சரிசெய்யக்கூடிய நிலைமை முதல் தீவிர மனச்சிதைவு நிலை வரை இதில் அடங்கும். மனச்சிதைவுக்கு ஆண், பெண், ஏழை, பணக்காரர், படித்தவர், படிக்காதவர் வித்தியாசமெல்லாம் கிடையாது. அது மட்டுமின்றி இன்னதுதான் காரணம் என்று பொதுவாக ஒன்றையும் குறிப்பிட்டுச் சொல்வது சாத்தியமில்லை'' என்கிறார் ஸ்கார்பின் மனநல மருத்துவரான டாக்டர் சாந்தா காமத்.

சென்னையின் மேற்கு அண்ணா நகர் பகுதியில் செயல்பட்டு வரும் 'ஸ்கார்ப்' மையம் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு துவக்கப்பட்டபோது, ஒருநாளைக்கு பத்து அல்லது பதினைந்து மனநோயாளிகள் சிகிச்சைக்கு வருவார்கள். ஆனால் இன்று தினமும் சுமார் எழுபத்தைந்து பேருக்கு மேல் வருகிறார்கள். இவர்களில் மூன்றில் ஒரு பங்கினர் புதிய நோயாளிகள். அண்ணா நகரிலேயே சுமார் 150 பேர் வரை தங்கி சிகிச்சை பெற வசதியுள்ளது. மேலும் மகாபலிபுரத்தில் ஆண்களுக்காகவும், திருவேற்காட்டில் பெண்களுக்காகவும்

பிரத்யேக அக நோயாளிகள் மையங்கள் செயல்பட்டு வருகின்றன.

"இன்றைக்கும் கூட மனச்சிதைவு நோய் பற்றிய விழிப்புணர்வு மக்கள் மத்தியில் பெரிய அளவில் இல்லை. உடம்புக்கு ஏதாவது என்றால் கைவைத்தியம் பார்த்துக் கொள்வதை விட டாக்டரைப் பார்ப்பது நல்லது என்று எண்ணம் இருக்கிறது. ஆனால் மனசுக்கு ஒன்று என்றால் அதை ஒரு பொருட்டாகவே யாரும் எடுத்துக் கொள்வதில்லை. பேய், பிசாசு, காத்து, கறுப்பு என்று போகிறார்



● ஸ்கார்ப் மையத்தில்...

களே தவிர, முறையான சிகிச்சை பெற அழைத்து வருவதில்லை" என்று வருத்தப் படுகிறார் டாக்டர் சாந்தா காமத்.

"மனச்சிதைவுக்குள்ளாகி, சிகிச்சை பெறுபவர்கள் தொடர்ந்து மாத்திரைகள் சாப்பிட வேண்டும்; தவறினால் மீண்டும் பிரச்னை ஏற்படும். அந்தக் காலகட்டத்தில் குடும்பத்தினரது ஒத்துழைப்பும், கவனிப்பும் மிக அவசியம். எனவேதான், மனச்சிதைவு நோயாளிகளுக்குச் சிகிச்சையளிக்கும் சமயத்தில் அவர்களது குடும்பத்தினருக்கும் தக்க ஆலோசனைகள் அளிக்கிறோம். பொதுவாக, 'மனநலம் பாதிக்கப் பட்டவர்களுக்குக் கல்யாணம் செய்து வைத்தால் எல்லாம் சரியாகிவிடும்' என்று சொல்லி திருமணம் செய்து வைக்கும் தவறைப் பல பெற்றோர்களும் செய்கிறார்கள். இதனால் குடும்பத்தில் பிரச்னை ஏற்பட்டு விவாகரத்து வரை செல்கிறது" என்கிறார் டாக்டர் தாரா.

ஸ்கார்ப் இன்று உலக சுகாதாரக் கழகத்தின் அங்கீகாரத்துடன் தெற்கு ஆசியாவின் மிக முக்கியமான மனச்சிதைவு ஆராய்ச்சி மையமாக விளங்குகிறது. அகில உலக அளவிலான கருத்தரங்குகள் இங்கே நடக்கின்றன. மையத்தின் முக்கியச் செயல்பாடுகளில் ஒன்று, இவர்கள் நடத்தும் 'பகல் நேரப் பாதுகாப்பு மையம்'. இதில் சிகிச்சையளிக்கப்பட்டு, குணமடைந்தவர்களுக்கு பிரிண்டிங், சணல் மற்றும் காகிதப் பைகள் தயாரிப்பு, மெழுகுவர்த்தி தயாரித்தல், ஒயர்கூடை பின்னுவது போன்ற பயிற்சிகள் அளித்து, அவர்களைப் பகல் நேரத்தில்



ஆக்கபூர்வமான பணிகளில் ஈடுபடுத்துகிறது.

சுனாமியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஸ்கார்ப் அளித்த சேவை பாராட்டுக்குரியது. "கட்டியிருந்த புடவை கடலில் அடித்துச் செல்லப்பட்டு விட்ட நிலையில் உயிருடன் கரை ஒதுங்கிய ஒரு பெண்ணுக்கு ஏற்பட்ட மனோரீதியான பாதிப்பும், அவளுக்கு தொடர் ஆலோசனை மற்றும் சிகிச்சை அளித்ததும் ஆயுசுக்கும் மறக்க முடியாத அனுபவம்" என்கிறார் டாக்டர் தாரா.

**- எஸ்.சந்திரமௌலி**

# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா
தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 18.4.2009**

**கலக்க வருதுப்பா கல்கி**

**திருவாரூர், நாகை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்



47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

('கண-கண' பரீட்சைத் தணல்களை அடிவயிற்றில் கட்டிக் கொண்டிருக்கும் மாணவர்களுக்காகத் தயாரிக்கப்பட்ட இந்த கேள்வித் தாளின் சிறப்பு அம்சம், இதற்குப் பதிலளிக்க வேண்டாம், ஜாலியாகப் படித்து மகிழலாம் என்பதே!)

★ லீக்காகும் பேனா, லீக்கான பால் கவரை வாங்க மறுக்கும் நீங்கள் லீக்கான கேள்வித்தாளை வாங்க மறுப்பீர்களா?

★ நடுநிசியில் சாமியாடிக்கொண்டே ஈக்களின் கண்கள் உங்களுக்கு இருந்தால் பரீட்சை ஹாலில் வசதியாக இருக்கும் என்று கருதியதுண்டா?

★ பிடிக்காத அரிசி உப்புமாவை மீதம் வைக்காமல் சாப்பிடுவது கடினமா? அல்லது படிக்காத சப்ஜெக்டுகளில் அரியர்ஸ் வைக்காமல் இருப்பது கடினமா?

★ ஞாபகமறதியைக் குணப்படுத்தும் ஞாபகச் சக்தி மாத்திரைகளை தினம் ஞாபகமாகச் சாப்பிட உபயோகிக்கும் வழிகளை ஞாபகம் இருந்தால் சொல்லவும்.

★ அலாரம் வைத்து எழுந்து படிக்க உட்காரும்போது பொசுக்கென்று மின்சாரம் அணைந்தால், மின் வாரியத்தை




அர்ச்சிக்க நீங்கள் தேர்ந்தெடுக்கும் வசவு வார்த்தைகளிலே கௌரவமான நான்கைப் பதவுரையுடன் எழுதவும்.

★ விடியற்காலையில் படிக்கும்போது உங்களை இம்சிப்பதில் தலையானது (அ) தெரு நாய்களின் கோஷ்டி ஊளையா? (ஆ) குடும்பத்தினரின் அவியல் குறட்டையா? (இ) பாத்ரூம் காலி பக்கெட்டுகளில் 'டொர்'ரென்று தண்ணீர் விழும் சத்தமா?

★ சிலபஸில் இல்லாத கேள்விகளைக் கேட்டுக் கழுத்தறுக்கும் அதிகப் பிரசங்கி ஆசிரியர்களுக்கு, பதில் மரியாதையாக படிக்கும்போது மேட்சிங்காக அமையும் எல்.ஆர்.ஈஸ்வரியின் நடுங்கும் குரல் அம்மன் பாடல் எது?

★ 'தாயிற் சிறந்த கோயிலும் இல்லை. டீயிற் சிறந்த பானமும் இல்லை'. ஒப்பிடுக.

★ ஒரு மாணவனின் வெற்றிக்குக் காரணம் ஜாயிண்ட் ஸ்டடிக்கு உருவான கூட்டணி தான் என்பதில் உங்களுக்கு ஒப்புதல் உண்டா?

★ நான்கு பக்கமும் சுழன்று பார்க்கும்

ஜே.எஸ்.ராகவன்

அவருடைய சம்பளத்தை எதியோப்பியக் கரன்ஸியில் அளிக்கப் பரிந்துரை செய்வீர்களா?

★ மதிப்பெண் பட்டியல் வந்த பின், வரவேண்டிய மார்க்குக்கும், வந்த மார்க்குக்கும் உள்ள தாராளமான இடைவெளியை விளக்குவதில் அள்ளித் தெளிக்கும் அண்டப் புளுகுகளில் ஐந்தைக் கூறவும்.

★ தாய் தந்தையர் வைத்த பழகிய பெயரை எழுத முடியாமல் புழல் கைதியாக




# பர... பர...

நம்பரை விடைத்தாளில் எழுத வேண்டிய அவல நிலை பற்றி பத்து வரிகளுக்கு மிகாமல் எழுதுக.

★ விடைத்தாளில் பிள்ளையார் சுழி மட்டும் போட்டுவிட்டு வேறொன்றும் எழுதாமல் பாஸ் மார்க் வாங்க நினைத்தால், அவர் வெறும் சுழி மாத்திரம் போட்டு விடுவது நியாயமா? இல்லையா?



★ கேள்வித்தாளைப் படிக்கத் தனியாக நேரம் அளித்து இருப்பது போல, ஓடிப் போய்ப் புத்தகங்களைப் புரட்டிப் பார்த்து விட்டு வரவும் அளிக்கப் போர்க்கொடி தூக்குவீர்களா?

★ பரீட்சைகள் முடிந்த பின் வரும் கனவுகளில் கண்ட பயங்கரமான காட்சிகளில் ஒன்றைப் படத்துடன் விவரிக்கவும்.

★ 'சொல்லிக் கொடுக்கப்பட்டவன் பாஸ். சொல்லிக் கொடுத்த நண்பன் ஃபெயில்.' இதில் உதைக்கும் லாஜிக்கை தர்க்க ரீதியாக விவாதிக்கவும்.

★ ரீ வேல்யுவேஷனில் கண்டுபிடித்த கூட்டல் தப்பினைச் செய்த கணக்கு ஆசிரியரை என்ன செய்யலாம்?

★ பலருக்கு வெறுப்பு தருவது பரீட்சை என்பதை அதில் உள்ள 'சை'யே உணர்த்துவது பற்றிச் சிறு குறிப்பு வரைக.

●

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** யோகமான வாரம். லட்சியங்கள் ஈடேறும். புதுவிதமான யுக்திகளைக் கையாண்டு சாதனை படைப்பீர்கள். தேர்வில் அதிக மதிப்பெண்கள் கிட்டும். நீண்ட காலம் முடிவு பெறாத வழக்கு முடிவுக்கு வரும். வியாழன்தோறும் குருபகவானை வழிபட்டு வர தீமைகள் விலகி நற்பலனை அடைய நேரிடும்.

**ரிஷபம்:** சுபமான வாரம். சுபச் செய்திகள் வீட்டுக் கதவைத் தட்டும். வீடு, மனை வாங்க ஏற்ற தருணம். நீண்ட நாள் தடைப்பட்டு வந்த சுபகாரியம் இனிதே நடக்கும். இல்லறத்தில் மகிழ்ச்சி ஏற்படும். சனிக்கிழமை தோறும் சனீஸ்வர பகவானுக்கு தீபம் ஏற்றி வழிபட்டு வர நற்பலன் அதிகரிக்கும்.

**மிதுனம்:** மனஸ்தாபம் விலகும். பய உணர்வு நீங்கும். வேலையில் இருந்துவந்த பிரச்னை நீங்கி மன அமைதி ஏற்படும். திருமணத் தடை விலகும். மன சஞ்சலம் நீங்கும். குழந்தைகள் மூலம் சுபச்செலவு ஏற்படும். வியாழக்கிழமைதோறும் ஸ்ரீராகவேந்திர சுவாமிகளை வழிபட்டு வர சங்கடம் தீரும்.

**கடகம்:** உல்லாசமான வாரம். வாக்குவன்மை மேலோங்கும். பண வசதி பெருகும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். வெள்ளி, செவ்வாய்தோறும் ராகு / கேதுவை வழிபட்டு வந்தால் நன்மை பெருகும்.

**சிம்மம்:** மனத்தில் ஒருவித பயம் இருந்த வண்ணம் இருக்கும். எதிர்ப்புகள் அதிகரிக்கும். தேவை இல்லாத செலவுகள் குறையும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கடன் சுமை குறையும். உடல் ஆரோக்கியம் சீராகும். குரு வழிபாடு செய்துவர நற்பலன் பெருகும்.

**கன்னி:** நேர்முகத் தேர்வில் வெற்றி கிட்டும். சுபகாரியப் பேச்சுவார்த்தை பலன் அளிக்கும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெறுவீர்கள். பணப்பிரச்னை இருக்காது. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பூர்வீகச் சொத்து வந்து சேரும். சனிக் கிழமை தோறும் ஆஞ்சநேயர் வழிபாடு செய்துவர வெற்றி வந்துசேரும்.

**துலாம்:** மனசஞ்சலம் தீரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். குழந்தைகள் இடம் மாறிப்போவார்கள். தொழில் மூலம் நல்ல வருவாய் ஏற்படும். வியாழன் தோறும் குரு வழிபாடு செய்துவர சங்கடங்கள் விலகும்.

**விருச்சிகம்:** நற்பலன் நிறைந்த வாரம். தெய்வ தரிசனம் கிட்டும். தடை விலகித் திருமணம் நடைபெறும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மனச் சோர்வு விலகும். வேலையில் உயர்வு ஏற்படும். ஆஞ்சநேயர் வழிபாடு சங்கடத்தைப் போக்கும்.

**தனுசு:** திருமணம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வேலையில் இருந்து வந்த பிரச்னைகள் தீரும். பண வசதி பெருகும். செலவுகள் சுபமானதாக இருக்கும். நீண்ட காலம் தடைப்பட்டு வந்த காரியம் சுமுகமான

பேச்சுவார்த்தை மூலம் முடிவாகும். ராகு / கேது வழிபாடு செய்துவர சங்கடம் தீரும்.

**மகரம்:** முயற்சிக்கும் காரியம் வெற்றி பெறும். எதிர்பார்க்கும் நல்ல தகவல்கள் வந்து சேரும். வழக்கு வெற்றி அளிக்கும். தேர்வில் நல்ல மதிப்பெண்கள் கிட்டும். வெளிநாட்டில் வேலை செய்யும் நண்பர்களால் நல்ல தகவல்கள் வரும். சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயர் வழிபாடு செய்துவர நற்பலன் பெருகும்.

**கும்பம்:** மனநிறைவான வாரம். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். உடன் பிறந்தவர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மனக்குழப்பம் தீரும். வியாழன்தோறும் குரு பகவானுக்கு விளக்கேற்றி வர நற்பலன் கிட்டும்.

**மீனம்:** பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். கடவுளின் அனுக்கிரஹம் கிட்டும். நீண்ட நாள் பிரச்னை முடிவுக்கு வரும். குழந்தைகள் வழியில் சுபச்செலவு ஏற்படும். கடன் பிரச்னை தீரும். வராத நிலுவைகள் வசூலாகும். ராகு / கேது வழிபாடு செய்துவர நன்மை பெருகும்.

# 12

மழை வந்து விட்டாலே
சாத்துகிறீர்கள்
ஜன்னல்களை அவசர
அவசரமாக.
தேடுகிறீர்கள் குடைகளை
வீடெங்கும்.
சாரல் அடிக்காத
மழைநீர் படாத
இடமொன்றுக்காக
சதா அலைகிறீர்கள்!
ஊரிலிருந்து
அன்பே உருவான
அத்தையோ மாமாவோ
பெரியப்பாவோ வரும்போது
இப்படித்தான் செய்வீர்களா?
அவர்களின் அன்புமழையில்
ஆனந்தமாக
நனைவீர்கள்தானே?

மழை என்பது -
மனிதனின் தவறுகள்
இறைவனால்
மன்னிக்கப்பட்டதன்
அடையாளம்.
மழை பெய்யும்போது
உடம்பெல்லாம் மழைநீரும்
சேறும் பூசிக்கொண்டு
வீதியில் நின்று கூத்தாட
வேண்டாம்
மனிதர்கள்.
மழைத்துளி என்பது பூதம்
அல்ல
அது
மழையின் பாதம்.
சிரசில் ஏந்திக் கொள்ளுங்கள்
செடிகொடிகளைப் போல.
மழையின் ஆசீர்வாதத்தைத்
தவறவிட்டு விடாதீர்கள்.

தஞ்சாவூர்க்கவிராயர்

❖ இந்த முறை தேர்தல் பிரசாரத்துக்கு எஃப்.எம். ரேடியோக்களைப் பல்வேறு கட்சிகளும் அதிகமாகப் பயன்படுத்தப் போகின்றன. காரணம், இப்போது அவற்றின் வீச்சு முன்னெப்போதுமில்லாத அளவுக்குக் கூடியிருப்பதுதான். மொத்தமுள்ள தொகுதிகளில் 288 தொகுதிகளில் எஃப்.எம். ஒலிபரப்பினைக் கேட்க முடியும்.

❖ கர்நாடக முதலமைச்சர் யெதியூரப்பாவின் மகன் ராகவேந்திரா இந்தத் தேர்தலில் ஷிமோகா தொகுதியிலிருந்து போட்டியிட விரும்புகிறார். ஆனால் கர்நாடக பா.ஜ.க.வின் முக்கியத் தலைவரான ஆனந்தகுமார் எதிர்க்கிறார். எனவே, ராகவேந்திரா, கர்நாடக மாநிலம் ராமச்சந்திரபுர மடாதிபதியை சிபாரிசுக்கு அணுக, மடாதிபதி நேரடியாக அத்வானியிடமே சிபாரிசு செய்திருப்பதாகத் தகவல்.



# கேளுங்க... கேளுங்க... கேட்டுக்கிட்டே

❖ 1951ல் நடந்த முதல் பொதுத் தேர்தலுக்கான மொத்தச் செலவு எவ்வளவு தெரியுமா? வெறும் 10.45 கோடி. இன்று ஒவ்வொரு பெரிய கட்சி வேட்பாளரும் இதைப் போல இரண்டு மடங்குக்குக் குறையாமல் செலவழிப்பதாகவும், ஜெயித்து வந்ததும் அதைப் போல இரண்டு மடங்கு சம்பாதிப்பதாகவும் தகவல். யம்மாடி!

❖ இந்தத் தேர்தலிலேயே ராகுல் காந்தியை காங்கிரஸ் கட்சியின் பிரதமர் வேட்பாளராக அறிவித்தால் காங்கிரஸின் வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும் என்று சில தலைவர்கள் சோனியா காந்தியிடம் ஆலோசனை சொன்னார்களாம். ஆனால் சோனியாவோ, ''இப்போது வேண்டாம்; 2014-ல் பார்த்துக் கொள்ளலாம்'' என்று அடித்துச் சொல்லி விட்டாராம்.

❖ மற்றவர்களுக்கு வேண்டுமானால் 13 அதிர்ஷ்டமில்லாத எண்ணாக இருக்கலாம். ஆனால், கலைஞரைப் பொறுத்தவரை ரொம்ப அதிர்ஷ்டம் என்கிறார், உடன்பிறப்புக்கு அவர் எழுதிய கடிதத்தில். அவரது லாஜிக்? 96ல், மே மாதம் 13ஆம் தேதி தான் தி.மு.க. வெற்றி பெற்று, கலைஞர் தமிழக முதல்வராகப் பதவி ஏற்றுக்

கொண்டாராம். 2004ல், இதே தேதியில்தான் எம்.பி. தேர்தல் வாக்கு எண்ணிக்கை நடந்து தி.மு.க. அணி 40/40 வாங்கியதாம். அது சரி! அதிர்ஷ்டத்தை நம்புவது பகுத்தறிவா?

❖ பூனே தொகுதியில் போட்டியிடுவார் என எதிர்பார்க்கப்பட்ட சரத்பவார், ஷோலாப்பூரிலிருந்து போட்டி இடுவார் என்று தெரிகிறது. தான் பலமுறை ஜெயித்த பாராமத்தி தொகுதியை தன் மகள் சுப்ரியா சூலேவுக்குக் கொடுத்துவிட்டார்.



✱ நடிகர் கோவிந்தா

❖ மும்பை வடக்குத் தொகுதியில் கடந்த முறை காங்கிரஸ் வேட்பாள ராகப் போட்டியிட்டு ஜெயித்தவர் இந்தி நடிகர் கோவிந்தா. மனிதர் அதன் பிறகு தொகுதிப் பக்கம் எட்டியே பார்க்கவில்லை என்று புகார். அவருக்கு மறுபடி அந்த சீட்டைத் தருவார்களா என்பது சந்தேகம்தான்.

# இருங்க!



✱ உமாபாரதி

❖ உமாபாரதிக்கும், அத்வானிக்கும் ஏழாம் பொருத்தம் என்பது பகிரங்க ரகசி யம். சட்டமன்றத் தேர்தலில் தன் தனிக்கட்சி வேட்பாளர்களை நிறுத்தி சூடுபட்டுக் கொண்டு உமாபாரதி இப்போது, ''பா.ஜ.க.வில் சேர மாட்டேன்; ஆனால் அத்வானி பிரதமர் ஆக ஆதரவு அளிக் கிறேன்'' என்று சொல்லி, கடிதம் எழுதி இருக்கிறார். யாருக்கு? அத்வானிக்கு இல்லை; ராஜ்நாத் சிங்குக்கு!

**- பரத் ராம்**



# தேர்வுக்குத் தோப்புக்கரணம்

**பரீட்சை நேரம் வந்துவிட்டாலே பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் ஒருசேர 'ஜுரம்' வந்துவிடும். பரீட்சை என்பது நிஜமாகவே பயப்படக்கூடிய விஷயமா? பதற்றமில்லாமல் இருப்பது எப்படி? போன்ற சின்னச் சின்ன சந்தேகங்களோடு குழந்தைகள் மனநல மற்றும் அக்குபஞ்சர் நிபுணர் டாக்டர் கரீமுனிஸாவைச் சந்தித்தோம்.**

''பெற்றோர்கள் பலரும் செய்யும் மிகப் பெரிய தவறு, பரீட்சை நேரத்தில் தங்கள் பிள்ளைகள் அதிக மதிப்பெண் பெற வேண்டும் என்பதற்காக அவர்களை இரவு அதிக நேரம் 'படி படி' எனச் சொல்வது. Organ Clock Theory என ஒரு வார்த்தை உண்டு. அதாவது ஒவ்வொரு பகுதியும் இந்த நேரத்தில்தான் நன்றாகச் செயல்படும் என்று அதற்கு அர்த்தம். இரவு பத்து மணிக்கு மேல் பித்தநீர் சுரக்கும் நேரம். இந்த நேரத்தில் கண் விழித்துப் படிப்பதை மாணவர்கள் கட்டாயம் தவிர்க்க வேண்டும். காலை நான்கு மணி முதல் ஐந்து மணி வரை நுரையீரல் நேரம். இந்தச் சமயத்தில் படிப்பதால் மூளை நன்றாக வேலை செய்யும்.''

**உணவுக்கும் படிப்புக்கும் தொடர்பு உண்டா?**

''நிச்சயம். நல்ல சத்தான உணவை உட்கொள்வதால் நல்ல மன மற்றும் தேக ஆரோக்கியம் கிடைக்கும். மன அமைதியைத் தரக்கூடிய சக்தி சப்பாத்திக்கு உண்டு. அதனால் பரீட்சைக்குப் போவதற்கு

## சின்னச் சின்ன சந்தேகங்கள்





முன்னர் சாதம், ரசம், சாம்பார் என விலாவரியாகச் சாப்பிடுவதைத் தவிர்த்து இரண்டு சப்பாத்திகள் மற்றும் வீட்டிலேயே தயாரித்த மாதுளை பழச்சாற்றை அருந்திவிட்டுச் செல்வது நல்லது.''

**பரீட்சை சமயத்தில் மாணவர்கள் எதிர்கொள்ளும் பொதுவான பிரச்னைகள் என்னென்ன?**



''புத்தகங்களை விடாமல், அதிக நேரம் உற்றுப் பார்ப்பதால் தலைவலி, கண் வலி போன்ற உபாதைகள் பொதுவாகவே பல மாணவர்களுக்கு ஏற்படுகிறது. இதற்கு வலது காலில் மூன்று விரல்களை வைத்துப் பார்த்து அதன் பின்வரும் ஒரு பாயின்டில் ஏழு முறை அழுத்தம் கொடுத்து வந்தால் (படம் 1 மற்றும் 2) கண் வலி, தலைவலி ஆகியவை ஏற்படாது.''

**ஞாபகமறதியைத் தவிர்ப்பது எப்படி?**

''இதற்கு ஒரே வழி நன்றாகத் தோப்புக் கரணம் போட வேண்டும். ஆமாம். சரியான முறையில் தோப்புக்கரணம் போடுவதால், ரத்த ஓட்டம் சீராக அமைந்து, மூளை நன்றாக வேலை செய்யும். ஞாபகமறதி என்பது அறவே வராது. இடதுகையை வலது காதின் மேல் வைத்து,(படம் 3 -ல் காட்டியிருப்பதைப் போல) கட்டை விரலைச் சரியான முறையில் வைத்து அழுத்தம் கொடுத்து பத்து நாட்கள் விடாமல் பத்து முறை செய்து வந்தாலே போதும். அபாரமான ஞாபகசக்தி கிடைத்து விடும்.''

**எக்ஸாம் நேர டென்ஷனை எப்படித் தவிர்ப்பது?**

''மாணவர்களுக்குத் தேவையில்லாத இந்த எக்ஸாம் நேர டென்ஷனை ஏற்படுத்துவது பெற்றோர்கள்தான். பெற்றோர்கள் அமைதியாக இருந்தாலே போதும். நம் உடலில் வலப்புறம் சூடானது. இடப்புறம் குளிர்ச்சியால் ஆனது. பரீட்சை சமயத்தில் உடல் சூட்டால் ஏற்படும் உபாதைகளைத் தவிர்ப்பதற்கு, இடதுநாசி துவாரத்தை மூடிக் கொண்டு நன்றாக வலது நாசி துவாரத்தால் மூச்சை உள்ளே இழுத்து சுவாசிக்கும் பயிற்சி செய்ய வேண்டும். அதைப் போலவே வலப்புறமும் மாற்றிச் செய்து வந்தால் பரீட்சை நேரத்தில் ஏற்படும் பயம், பதற்றம் நீங்கும்.''

**சரியான தூக்கம் வர டிப்ஸ்...?**

''காதுகளிலிருந்து நேர்க்கோடாக உச்சந் தலையில் நடுப்பகுதியில் 12 முறை ஆட்காட்டி விரலை வைத்து, அப்பிரதட்சிணமாகச் சுற்றினால் நல்ல நிம்மதியான தூக்கம் வரும். (படம் 4)

அப்புறமென்ன? டென்ஷனை விரட்டி, தேர்வில் வெற்றிபெற வேண்டியதுதானே!

**- நளினி சம்பத்குமார்**

மாப்பிள்ளை வீடு பார்க்க கோச்சடையில் இருந்து வந்திருந்தார்கள். பெண் வீட்டில் இருந்து ஆம்பளை ஆளுங்க, பொம்பளை ஆளுங்க என்று ஒரு ஆறு ஏழு பேர். சின்னமனூரில் இருந்து பங்காளிகள், சம்பந்தக்கார வகையறாக்கள் என்று நான்கு ஐந்து பேர். உள்ளூர் நாட்டாமைக்காரர், கணக்குப் பிள்ளை, பக்கத்து வீட்டு நாடார், உறங்காப்புலித் தேவர், அப்பாவின் பால்ய சினேகிதர் முத்தால் நாயக்கர் என்று வீடு நிறைந்து விட்டது. இப்படி மனுஷர்கள் வந்து கூடும்போது மனகம் நிறைந்து விடுகிறது. பெண்ணோட சின்னம்மாள் வாய் விட்டே சொல்லிவிட்டாள். ''பூங்கோதை கொடுத்து வச்சவ. பட்டிக்காடுன்னாலும் ஊர் வளமை. வாக்கப்படப் போற வீடும் மனுஷரும்... அவளுக்குக் கொடுத்து வெச்சிருக்கணும்!''

''எல்லாம் நம்ம கையிலெயாம்மா இருக்கு; அது அதுக்கு அப்பவே போட்டு வெச்சிருப்பான்'' என்றது அம்மா.

ஒருவர் பெண்ணின் அப்பாவிடம் ஏதோ சொல்லிக் கொடுத்தார். உடனே அவர் அப்பா முகம் பார்த்து, ''பெரியவுக ஒரு முடிவு சொல்லணும்'' என்று கையைக் குவித்தார். ஐயாவும் நாட்டாமைக்காரரும் ஒருவரை ஒருவர் ஒரு பார்வை பார்த்துக் கொண்டனர். ''நீங்கதேன் சொல்லணும்.



பாத்தீங்க. உங்க அபிப்பிராயம் என்னானு சொல்லுங்க.'' அவர் தயங்கி சற்றுக் கூசினார். ''எங்களுக்கு எல்லாம் பிடிச்சப் போச்சு'' என்று மட்டும் சொன்னார்.

ஐயா அம்மாவை ஒரு பார்வை பார்த்தார். பின்பு அக்காவை ஒரு பார்வை பார்த்தார். இருவரும் தலை ஆட்டினர். உடனே அக்காவின் வீட்டுக்காரரை முன்னாடி வந்து உட்காரச் சொல்லி சமிக்ஞை காட்டினார். அவர் கூட்டத்தை விலக்கிக் கொண்டு வந்தார். அவரிடம், ''நீங்க என்ன சொல்றீங்க?'' என்றார். அவர், ''பெரியவங்க பேசி முடிங்க'' என்றார். அப்பா கடைசியாக பெண்ணின் அம்மாவைப் பார்த்து, ''அந்தப் பாப்பாட்டயும் அபிப்பிராயம் கேட்டுட்டீங்கல்ல'' என்றார். இந்தக் கேள்வி அவர்களுக்குச் சற்று திடுக்கென்றது.

''இதப் போயி அவட்ட என்னத்தக் கேக்குறதாம். புதுசால்ல சொல்றீக'' என்று பெண்ணின் சின்னம்மா சபையைப் பார்த்தது. அதற்குள் அந்தப் பக்கம் இருந்து, ''ஏய் ஜெயாச் சித்தி, கேட்டுக்கங்கன்னா, கேட்டுக்குறோம்னு சொல்லுங்க'' என்றது.

அதற்குள் பெண்ணின் அம்மா, ''அவ புடிச்சிருக்குனு சொல்லிட்டா'' என்றாள்.

ஐயா, ஜெயபாலைப் பார்த்தார். ஜெயபால் வெட்கத்தில் தலையைக் குனிந்து கொண்டான். ''சொல்லுங்க மாப்ளெ'' என்றார் மாமா. தலையைக் கவிழ்ந்து கொண்டே, ''பேசி முடிங்க'' என்றது. ''மாப்ளே பொண்ணு மாதிரியே வெட்கப்படுறாப்புலெ'' என்று எல்லோரும் சிரித்தார்கள்.

கோவிந்து அப்பாவின் மரப்பெட்டியைத் திறந்து பஞ்சாங்கத்தை எடுத்துக் கொண்டு வந்தான். பதினைந்து நிமிடம் மேலும் கீழும் பக்கங்களைப் புரட்டி, ''தையிலெ வெச்சுக்கலாமா?'' என்றார். எதிர்த்தரப்பில் குரலைக் காணோம். ஒன்றிரண்டு ஆம்பளைங்க தலையைக் குனிந்து கிசுகிசுத்துக் கொண்டிருந்தனர். உடனே அப்பா, சற்று அமைதியாகி அவர்கள் பேச நேரம் கொடுத்தார். பின் பெண்ணின் சித்தப்பா, ''நீங்க நகை நட்டு என்னா எதிர்பார்க்குறீங்கன்னு சொல்லிட்டா நல்லா

# காற்று வரும் பருவம் !



இருக்கும்'' என்றார். உடனே அப்பா, ''உங்க பொண்ணை எப்படி அனுப்புறீங் களோ அனுப்புங்க; எங்களுக்கு அதெல் லாம் முக்கியமில்லை'' என்றார்.

''நீங்க பெரும்போக்கா இருக்கலாம். நாளைக்குக் குத்தம் கொறைன்னு வந்திடப் படாது. வெடிப்பா பேசிக்கிறது நல்லது'' என்றது ஒரு கோச்சடைக் குரல். ''சரி உங்க பிரியம்'' என்று அப்பா சிரித்தார். உடனே, ''ஏப்பா உன்னாலெ என்ன முடியுமுன்னு சொல்லுப்பா'' என்று ஒரு விரல் பெண் ணின் அப்பாவைக் குத்திற்று. அவர் ஒரு முறை தன் சம்சாரத்தைப் பார்த்துவிட்டு, ''பத்துப் பதினைஞ்சுதேன் நம்மளாலெ முடியும்'' என்றார். உடனே அப்பா, ''சந்தோஷம்'' என்றார். நாட்டாமைக்கார ரைப் பார்த்து, '' 'தை'லெ வெச்சுக்கலாம்'' என்றார். நாட்டாமைக்காரர், ''தை அஞ்சு நல்ல நாளா இருக்கு'' என்றார். கோச்சடைக் காரர்களும் அதை உறுதி செய்தனர். ''கார்த்தி கைலெ வெத்தலெ பாக்கு மாத்திடுவோம்'' என்றனர். அப்பா, ''ஐப்பசி அறுப்பு முடிஞ் சுட்டா பண்ணிக்கலாம்'' என்றார். எல் லோருக்கும் சந்தோஷம்.

ஐயா அறுப்புக்குச் சொல்லிவிட்டார். கொத்துக்காரர், மேட்டுவயலுக்கும் ஓடை வயலுக்கும் சேர்த்தே ஆள் சொல்லிவிட்டார். ஒரே நாளில் இரண்டுக்கும் 'கருதறுப்பு.'

வீட்டில் எல்லோருக்கும் வேலை. வீட் டுக்கும் களத்துக்குமாய் அலைபட வேண் டும். ஐயாவும் ஜெயபால் அண்ணனும் வயலில் இறங்கிவிட்டனர். ஆளுக்கு ஒரு வயல். அம்மா களத்துக்குக் காவல். கோவிந்துவை இடைவெளியில் நிறுத்தி விட்டார்கள். பொழுது விடியவும் வயலுக் குள் அறுப்புக்கு ஆள் இறங்கிவிட்டது.

உச்சிப்பொழுதுக்குள் அறுத்துப் போட்டு விடுவார்கள். அதற்குப் பிற்பாடு கட்டு கட்டத் தொடங்குவார்கள். அப்போது தான் உஷாராக இருக்க வேண்டும். பொன் நிறமாக இருக்கும் மணிகள் உதிர்ந்து விடாமல் கட்ட வேண்டும். கட்டுக் கட்டும் போதும் சரி, கட்டைத் தூக்கும் போதும் சரி, வயல்காரன் படும் பாடு சொல்ல முடி யாது. நெல் உதிர்ந்து விடாமல் இறுக்கிக் கட்டி, முழக்காலை முட்டுக் கொடுத்து இழுத்துக் கட்ட வேண்டும். மடமட வென்று ஒரு ஆள் தூக்கி விடும். ஓட்டமும் நடையுமாய் வரப்பில் ஓடும். வரப்புத் தாண்டி வாய்க்கால் பாதையில் ஓடி களத் தில் போட்டுவிட்டு வர வேண்டும். பொம் பளைங்க முழங்காலுக்கு மேலே தூக்கிக் கட்டிக் கொள்ளும். ஆம்பளைங்க அரை



''யோவ்... போர் முரசு அடிக்கும்போது கொஞ்சம் மெதுவா அடிங்கய்யா.''

''ஏன் தளபதியாரே?''

''நம்ம மன்னர் அதுக்குள்ள தான்யா ஒளிஞ்சுக்கிட்டு இருக் கார்...!''

- ப. சரவணன், கல்பாக்கம்

''தினமும் நான் ஜிம்முக்குப் போவதால் என் காதலி என்னைச் செல்லமா கூப்பிடறா?''

''என்ன சொல்லிக் கூப்பிடறா?''

'' 'ஜிம்மி'ன்னு தான்!''

- எம்.அசோக்ராஜா,
திருச்சி-15



டிரவுசரும் வெற்று உடம்புமாய் இருக்கும். சில இளவட்டம் சாயம் போன எம்.ஜி.ஆர். படம் போட்ட பனியன் போட்டிருக்கும். சில கட்டு தளர்ந்து கண்ணை மறைத்துவிடும். இறுக்கிப் பிடித்துக் கொண்டே ஓட வேண்டும். கொத்துக்காரன் குரல் துரத்திக் கொண்டேயிருக்கும். ''ஏலா ஓடுலா. என்னா நிக்கிறவ. வொக்காளி இந்த வாக்குலெ குத்துனனாக்க...'' ''பறாக்கு பார்க்காம ஓடுடி இவளே...''

அவர்கள் கதிர்க்கட்டைச் சுமந்து கொண்டு ஓடுகின்ற அழகே அழகுதான். இடுப்பை ஒரு தினுசாக ஆட்டி ஆட்டி நடப்பார்கள். சிலருக்கு மூச்சு வாங்கும். சிலருக்கு முகமெல்லாம் வியர்க்கும்!

கோவிந்து களத்துக்கும் வயலுக்கும் நடுவாக்கில் நின்று கொள்வான். இடையில் சில சிறுசுகளும் கிழவிகளும் சுமந்து கொண்டு போகிற கதிரை உருவுவார்கள். அதை விரட்ட வேண்டும். கதிர்க்கட்டு சுமப்பவர்களின் கிழவிகளோ, சொந்தங்களோ கூட இந்தக் கூட்டத்தில் இருக்கும். 'நைசா' கொஞ்சம் கதிரை ஒழுக விட்டு விட்டுப் போகும். இல்லாவிட்டால் 'தொப்' பென்று கால் தடுக்கினாற்போல் கீழே போட்டு விட்டுப் பின்பு தூக்கிக் கொண்டு ஓடும். சிந்திச் சிதறிய நெல்லைக் கூட்டி அள்ளி சுலகில் புடைத்து வைத்துக் கொள்ளும். இதை எல்லாம் கண்காணிக்கத்தான் கோவிந்து.

கோவிந்து கெடுபிடியெல்லாம் பண்ண மாட்டான். பண்ணத் தெரியாது. 'வெளஞ்ச நெல்லை முழுசா வூட்டுக்குக் கொண்டு போனா வெளங்காது'ம்பார் ஐயா. 'காக்கா, குருவி, மனுஷ மக்க தின்னது போக கொண்டு போனாப் போதும்' என்பார். ''அண்ணே! ஒரே ஒரு பிடி உருவிக்கிறேன்'' என்று சில சிறுசுகள் கேட்கும். கோவிந்து தலையாட்டி விடுவான்!

'கருதறுப்பு' சமயம் களத்து மேட்டில் ஏகப்பட்ட கடைகள் வந்துவிடும். ஐஸ் பெட்டிக்காரன், பஞ்சு மிட்டாய்க்காரன், ஜவ்வு மிட்டாய்க்காரன் என்று ஒரு பெருங் கூட்டம் சுற்றிக் கொண்டு இருக்கும். ஒரு கைப்பிடி நெல்லு கொடுத்தால் ஒரு ஐஸ் குச்சி. ஜவ்வு மிட்டாய்க்காரன் மயிலோ, 'வாட்சோ' செய்து கொடுப்பான். கொசுறாகக் கன்னத்தில் ஒரு பொட்டும், நெற்றியில் ஒரு பொட்டும் இழுத்து விடுவான். கன்னமும் கையும் பிசுபிசுவென்று இருக்கும். உடை போட்ட பொம்மையை வைத்துக் கொண்டு ஒரு பாட்டும் ஆட்டமும் போட வைப்பான்.

**பொ**ழுது இறங்கிவிட்டது. கோவிந்து களத்துக்குக் காவலுக்குக் கிளம்பிவிட்டான். முதலில் ஐயாதான் கிளம்பினார். 'நான் போறேன்' என்று இவன் சொல்லவும் 'சரி' என்றார்.

ஜெயபால் அண்ணன் வீட்டுக்கே வரவில்லை. களத்திலேதான் கிடக்கிறது. வேளாவேளைக்குச் சாப்பாடு களத்துக்கே போய்விட்டது. கோவிந்து இரவுச் சாப்பாட்டை அண்ணனுக்கும் அவனுக்கும் சேர்த்தே எடுத்துக் கொண்டான். சிறு ஓடையைத் தாண்டி ஒத்தப் புளிக்கிட்டப் போகும் போது, செட்டியார் வண்டி வந்தது. செட்டியாரே வண்டி ஓட்டிக் கொண்டு வந்தார்.

''களத்துக்குக் கிளம்பிட்டீகளாக்கும்.''

''ஆமாம்.''

''வாங்க'' என்று மாட்டுக் கயிற்றை இழுத்துப் பிடித்தார். வண்டி நின்றது. கோவிந்து தயங்குவதைப் பார்த்து, ''வாங்க நானும் அங்கிட்டுத்தேன் போறேன்'' என்றார். கோவிந்து சக்கரத்தில் கால் வைத்து ஏறினான். தூக்கு வாளி, போர்வை எல்லாவற்றையும் வைத்துவிட்டு, முளக் கம்பைப் பிடித்து உட்கார்ந்திருந்தான். வண்டி கிளம்பிற்று. ''அண்ணனுக்குச் சோறு கொண்டு போறீகளாக்கும்!'' என்றார். ''ஆமாம்'' என்றான். ''நமக்கு ஒரு காணி அரைக்காணி கெடக்கு. நாளைக்கே அறுக்கச் சொல்லலாமுண்டு இருந்தேன். அதுக்குள்ள தண்ணி கட்டுக்காரன் தண்ணியப் பாச்சிப்புட்டான். வெயிலடிச்சாலும் காயும்'' என்றார்.

''மேட்டு வயலா செட்டியாரே?''

''அது இல்லெ. அந்தக் கிழக்கு ஓரம். கொடிக்காலெ ஒட்டி இருக்கில்ல அதேன்.''

''நீங்களே வண்டி பத்திட்டுப் போறீங்க?''

''ம், மம்பட்டியான் அங்கிட்டுதேன் இருக்கான். மேட்டுக்களத்துலெ இருப்பான். சுப்பையா பூசாரிட்ட வைக்கோல் வாங்குச்சு. அத அங்குனக்குள்ளே 'படப்பு' போடலாமுண்டு பாக்குது.''

கோவிந்துவின் சிந்தனை எங்கோ தாவிவிட்டது. பஞ்சுவின் அம்மாவும் இந்தக் களத்தில்தான் இருக்கிறது. அப்பனும் இங்குதான் இருப்பதாகச் செட்டியார் கூறுகிறார். அவள் மட்டுமா ஊரடித் தோட்டத்தில் இருப்பாள்? நன்றாக இருட்டி இருந்தது. அந்த இருளும் இருள்தரும் அமைதியும் அவனை விழிக்கப் பண்ணிவிட்டன. வானத்தையும் இருள் வெளியையும் பார்த்துக் கொண்டே வந்தான். வண்டி நின்றுவிட்டது. கோவிந்து திடுக்கிட்டுப் பார்த்தான். களம் வந்து விட்டது. செட்டியார் வண்டி நிற்பதைப் பார்த்ததும் மம்பட்டியான் எங்கிருந்தோ ஓடிவந்தார்.

''என்னா மம்பட்டி?''

''இந்த மேட்டுலெ போட்டுடலாம்யா. மழை தண்ணி வந்தாலும் தோதா இருக்கும்.''

''சரிதேன்!'' என்று இறங்கினார். கோவிந்துவும் இறங்கினான். செட்டியாரிடம் சொல்லிக் கொண்டு நடந்தான். சற்று தூரம் தான் நடந்திருப்பான். ஒரு களத்துக் கடை வாசலில் பஞ்சு! நம்ப முடியாமல் திகைத்துப் போய்ப் பார்த்தான். அவளேதான்!

**(காற்று வீசும்)**



**அவர்கள் கதிர்க்கட்டைச் சுமந்துகொண்டு ஒடுகின்ற அழகே அழகுதான். இடுப்பை ஒரு தினுசாக ஆட்டி ஆட்டி நடப்பார்கள். சிலருக்கு மூச்சு வாங்கும்.**

# பேசும் வானவில்







**தடைக்கு விடை கொடு - மெர்வின், குமரன் பதிப்பகம், 19, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.50/-**

''எட்டு வயதுச் சிறுவன் நள்ளிரவில் வீட்டிலிருந்து சென்று விட்டான். அவனைத் தேடி ஒரு குளக்கரையில் கண்டுபிடித்தனர். மீன்கள் துள்ளி விளையாடுவதைப் பார்த்துக்கொண்டிருந்த அவனிடம் தாய் கேட்டார், 'உனக்குப் பயமாக இல்லையா?' என்று, 'பயம் என்றால் என்னம்மா?' என்று திருப்பிக் கேட்ட அந்தச் சிறுவன்தான் மாவீரன் நெப்போலியன்'' - இது போன்று ஆங்காங்கே சில்லென்று சில தூறல்கள் கொண்ட சுய முன்னேற்றக் கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல்.




**எங்கள் தந்தையர்! - சுப்ர. பாலன், வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.100/-**

''சையத் இக்பால் ஹஸன் என்று ஒருவர் எனக்கு ஹிந்தி கற்றுத் தர முயன்றார். நடந்தது வேறு! உருதுமொழிக்காரரான அந்த ஹிந்தி ஆசிரியர் ஒருநாள் அப்பச்சியிடம் போய், தமிழில் பேசியிருக்கிறார். அப்பச்சி வியப்போடு, 'எங்கே கற்றுக்கொண்டீர்கள்?' எனவும், 'நம்ம சரவணன் சொல்லிக்கொடுத்ததுதான்' என்றார்'' - தந்தை ஏவி.எம். குறித்து ஏவி.எம். சரவணனின் பசுமை நினைவுகள். இது போல இருபத்திரண்டு கட்டுரைகளில், தமிழ்நாட்டில் புகழ் பெற்று விளங்கியவர்களின் வாரிசுகள் தங்கள் தந்தையர் குறித்துப் பேசும் வானவில் பதிவு.

**சிரஞ்சீவியான சித்தர்கள் - கள்ளிப்பட்டி சு.குப்புசாமி, மணிமேகலை பிரசுரம், 7, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.50/-**

சித்தர்கள் வாழ்ந்த இடங்களையும், சித்துக்கள் புரிந்த தலங்களையும் குறித்து விவரிக்கிறது இந்நூல். முப்பத்திரண்டு சித்தர்களின் வாழ்வியல் நிகழ்வுகளை உரைக்கிறது. புலிப்பாணிச் சித்தர், அழுகணிச் சித்தர் போன்றோரின் பெயர்க் காரணங்கள் ஆச்சர்யம் தருகின்றன. சித்தர் வரலாற்றில் ஆர்வம் கொண்டோருக்கு, இந்நூல் கையில் கிடைத்த கற்கண்டு!

– நேயமுகில்



· மருதன் ·

# நான் ஒரு பட்லர்!

கெண்டனின் இந்தக் கடிதத்தை வாசிக்கும் போது ஒரு விஷயம் தெரிகிறது. அவர் அத்தனை சுகமாக இல்லை. நான் ஒரு பட்லர்.

மிஸ் கெண்டன்! இதைவிட ரம்மியமான ஒரு பெயரை நீங்கள் யாராவது கேள்விப்பட்டதுண்டா? கேள்விப்பட்டிருக்க முடியாது என்று நான் சொல்லமாட்டேன். இவரைவிட அழகான பெண்களை நீங்கள் சந்தித்திருக்கலாம். உறுதியாகச் சொல்ல முடியவில்லை. வயது ஒரு காரணமாக இருக்கலாம். இருபது ஆண்டுகளுக்கு முன்னர் கேட்டிருந்தால் ஒரு வேளை சற்றே அழுத்தமாகச் சொல்லியிருப்பேன். ஆம், மிஸ் கெண்டன்தான் உலகிலேயே அழகான பெண். அவளைப் போன்ற பெண்ணை நீங்கள் கனவிலும் பார்த்திருக்க முடியாது.

மிஸ் கெண்டன் எழுதிய கடிதம்தான் இது. ஆ, இனி அவர் மிஸ் கெண்டன் அல்ல. அவருக்குத் திருமணமாகிவிட்டது. இனி அவர் மிஸஸ் பென். புரிகிறது. இதை நீ எப்படி தாங்கிக் கொள்கிறாய்? இதுதானே உங்கள் கேள்வி? என்னால் இதற்குத் திட்டவட்டமான பதில் எதையும் தர முடியவில்லை. யாரோ முன்பொருமுறை சொன்னது போல் இது என் சுபாவமாகவே இருக்கக் கூடும். எதையும் போல் இதையும் தாங்கிக்கொண்டேன். எதையும் போல் இதையும் உதாசீனப்படுத்தத் தெரிந்து கொண்டேன். உதாசீனப்படுத்துவது போல் பாவனை செய்யவாவது தெரிந்து கொண்டேன்.

'நான் நன்றாக இருக்கிறேன். என் கணவர் என்னைப் பொறுப்பாகக் கவனித்துக் கொள்கிறார். குறை சொல்வதற்கு ஒன்றுமில்லை. நீ நலமா?' மிஸ் கெண்டனின் இந்தக் கடிதத்தை வாசிக்கும்...

தற்சமயம் ஓர் அமெரிக்கரிடம் பணிபுரிகிறேன். இவர் மிகவும் நல்லவர். அசலான அக்கறையும் மேலதிக அன்பும் கொண்டவர். என்னைத் தவிர வேறு யார் இங்கே இருந்திருந்தாலும், கவலைகள் அற்று நிம்மதியாக வாழ்ந்திருக்க முடியும். இருங்கள், இருங்கள். எனில், நீ கவலையுடன் இருக்கிறாயா என்றுதானே கேட்கிறீர்கள்? இல்லை, எனக்கு எந்தக் கவலையும் இல்லை. மிஸ் கெண்டனின் இந்தக் கடிதத்தை இப்போது வாசித்ததால்தான் அவரை இங்கே நினைவு கூர்ந்தேன். மற்றபடி, எனக்கு அவர் குறித்து எந்தவிதக் கவலையும் இல்லை.

எனக்கு எப்போதுமே ஆசைகள் இருந்ததில்லை. ஆகவே, வெறுப்பும். யாரைப் பற்றியும் எனக்குப் பெரிதாக அபிப்பிராயம் கிடையாது. அதற்காக, விட்டேத்தியான மனோபாவம் கொண்டவன் என்று நினைத்துவிட வேண்டாம். நான் அந்தந்த நொடியில் வாழ்ந்து வருகிறேன். ஒரு




ஸ்பூனைக் கையில் எடுத்தால், அந்த ஸ்பூனே என் உலகம். அந்த ஸ்பூனே என் வாழ்க்கை. என் லட்சியம் அந்த ஸ்பூனைச் சுத்தப்படுத்துவது மட்டுமல்ல, உலகில் வேறு எந்த ஸ்பூனைவிடவும் பளபளப்பானதாக அதை மாற்றுவதுதான். மேஜை விரிப்புகளைச் சரி செய்யும்போது என் ஆன்மாவும் உயிரும் என்னுடன் இறங்கி வந்து பணியாற்றும்.

ஒழுக்கம் என்றொரு பெயரை நீங்கள் இதற்குச் சூட்டுவீர்கள் என்று தெரியும். எனக்கு மிகவும் கூச்சமாக இருக்கிறது. இது மிகவும் பெரிய வார்த்தை. இது என் இயல்பு என்பதுதான் உண்மை.




சமையல்கூடத்தில் நுழையும்போது மட்டும் ஒரு பட்லராக மாறுவதும், மேல் கோட்டைக் கழற்றிவிட்டால் சாதாரண ஒரு நபராகவும் மாறும் வித்தை எனக்குத் தெரியாது. சட்டையை மாற்றுவதுபோல் இயல்பையும் மாற்றிக் கொண்டுவிட முடியுமா என்ன?

ஏதேதோ பேசிக் கொண்டிருக்கிறேனா? எதையெதையோ சிந்தித்துக் கொண்டிருக்கிறேனா? அங்கும் இங்கும் தாவித்தாவிச் செல்கிறேனா? தத்துவ விசாரணையில் ஈடுபடுவது போன்ற ஒரு பாவனை தென்படுகிறதா? மன்னித்துக் கொள்ளுங்கள். எனக்கு வயதாகிவிட்டது. எதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும் என்று முடிவு செய்யும் உரிமையைக்கூட நான் இழந்துவிட்டேன். என் நினைவுப் புதை குழியில் இருந்து பூனை எதையெதையோ கவ்விப்பிடித்து இழுத்துவந்து என் முன்னால் போடுகிறது. நான் ஒரு சாதாரண பட்லர். என் கதையும் சாதாரணமானதே.

Kazuo Ishiguro எழுதிய The Remains of the Day என்னும் நாவலின் சிறப்பம்சமே இந்த சாதாரணத் தன்மைதான். இரண்டாம் உலகப் போருக்குப் பிந்தைய காலகட்டத்தில் நிகழும் கதை இது. காதலும் விசுவாசமும் இந்த பட்லரை மாறிமாறிப் பந்தாடுகின்றன. என்றாலும் அவர் சாதாரணமானவர்தான். அவர் கதையும் சாதாரணமானதே. இயல்பாகவும் சாதாரணமாகவும் இருக்கும் ஒரு பொருளைக் கொண்டாடக்கூடாது என்று யார் சொன்னது?

# பார்வையால் பாவனம் தருபவள்!

**கலாநாதா** - கலைகளுக்கெல்லாம் தலைவி

**காவ்ய ஆலாப வினோதினி** - காவியங்களின் ஆலாபனையினால் அர்ச்சிக்கப்படக் கூடியவள்; அவற்றிலே இருப்பவள். அம்பாளுக்குக் காவியங்களையெல்லாம் கேட்பதில் அவ்வளவு சந்தோஷமாம். அவளைப் பற்றி அவளுடைய பக்தர்கள் பாடக்கூடியதை, சொல்லக்கூடியதை ரசித்து ரசித்துக் கேட்பதில் அவளுக்கு ப்ரீதி அதிகம். அதனால்தான் காவ்ய ஆலாப வினோதினி. தன்னுடைய குழந்தைகள் எதையெல்லாம் பாடுகிறார்களோ அதையெல்லாம் கேட்டுக் கொண்டிருப்பாளாம்!

காளிதாஸர் பாடியபோது சந்தோஷமாகக் கேட்டாளாம். குழந்தைகளாக இருக்கக் கூடியவர்கள் எதையெல்லாம் பாடுகிறார்களோ அதையெல்லாம் கேட்பதில் ஒரு தாய்க்கு ப்ரீதி இருக்கும் அல்லவா? குழந்தையின் பேச்சுக்கு அம்மா தனியே ஓர் அகராதியே வைத்திருப்பாள். அது 'ஊ' என்று சொன்னால் ஓர் அர்த்தம்; 'ஊஹூம்' என்று சொன்னால் வேறு ஒரு அர்த்தம்! சில வீடுகளில் பார்க்கலாம் - பாஷையே மாறிப் போயிருக்கும். வீட்டுக் குழந்தை, மழலையில் ஏதோ ஒரு வார்த்தை சொல்லியிருக்கும் - அது சொல்லத் தெரியாமல் சொன்ன அந்த வார்த்தையே அந்த வீட்டில் நிலைத்துவிடும்! வழிவழியாக அந்த வார்த்தை (அந்தப் பொருளைக் குறிக்க) அக் குடும்பத்தில் பயன்படுத்தப்பட்டு வரும்! ஒரு தாத்தாவாக இருப்பவர் தாம் சின்னக் குழந்தையாக இருந்தபோது தயிரை எப்பெயரால் மழலையாகக் குறிப்பிட்டாரோ, அதுவே தலைமுறை தலைமுறையாகத் தொடரும்!

இவ்வாறு, குழந்தை சொல்வதைக் கேட்பதில் ஒரு சாதாரண சராசரி தாய்க்கே அவ்வளவு ப்ரீதி என்றால், ஜகன்மாதாவாக இருக்கக்கூடிய பராசக்திக்குத் தன்னுடைய குழந்தைகள் சொல்வதை ரசிப்பதில் எவ்வளவு அலாதியான ப்ரீதி இருக்கும்!

**ஸசாமர ரமா வாணி ஸவ்ய தக்ஷிண ஸேவிதா**

ரொம்ப சுலபமான விஷயம் இது. அம்பாள் நடுவிலே உட்கார்ந்திருக்கிறாள். ஒரு பக்கத்தில் ரமாவாக இருக்கக்கூடிய மஹாலக்ஷ்மி. இன்னொரு பக்கத்தில், வாணியாக இருக்கக்கூடிய சரஸ்வதி. இவ்விருவருமே நின்று கொண்டு சாமரம் வீசுகிறார்கள்.

**சொல்லும் பொருளும்**

இதிலே, யார் எந்தப் பக்கம் நிற்கிறார்கள்? ஸவ்ய தக்ஷிண ஸேவிதா என்கிறபோது, ஸவ்ய என்ற வார்த்தை கொஞ்சம் சிக்கலானது.

சம்ஸ்கிருதம் என்று இல்லை, பாரத தேசத்தில் மொழிகள் பலவற்றிலும் இது போன்ற வார்த்தைகள் வந்து சிக்கிக் கொள்ளும்! அதற்குச் சரியான அர்த்தம் தெரியவில்லை என்றால், டிக்ஷனரியை வைத்துக் கொண்டு புரட்டிப் பார்த்துப் பொருள் அறிய முடியாது.

ஸவ்ய என்ற ஒரு வார்த்தை இரு பொருட்களில் இடம்பெற வாய்ப்பு இருக்கிறது. இந்த இரண்டு பிரயோகங்களும் நேர் எதிர்மறை அர்த்தத்தைக் கொடுக்கும்!

அம்பாள் உபாஸனையிலே ந்யாஸம் என்பது வரும். ஷோடஸ ந்யாஸம் என்பார்கள். ஆதாரச் சக்கரங்களில் அம்பாளை நிலைநிறுத்துவதற்கு ந்யாஸம் என்று பெயர். அப்படியென்றால் என்ன அர்த்தம்? ஒரு குறிப்பிட்ட ஆதார சக்கரத்தில் அம்பாளை ஆவாஹனம் செய்வது என்றால் அவளை அங்கே பொருத்துவது என்று தானே அர்த்தம்? ஆக, ந்யாஸம் என்றால் பொருத்துதல் என்று அர்த்தம் ஆகிவிடும்.

ஆனால் ந்யாஸம் என்பதற்கு இன்னொரு அர்த்தமும் இருக்கிறது - 'வெட்டுவது' என்கிற அர்த்தம்! சன்யாஸி - பந்தங்களையெல்லாம் வெட்டி அறுத்துவிட்டவர் சன்யாஸி. ஆக, வந்து விழுகிற இடத்தைப் பொறுத்து, வார்த்தையின் அர்த்தம் மாறும். எந்த இடத்தில் பிரயோகமாகிறது என்பது தெரியாமல், வெறுமே சொல்லுக்கு அகராதியில் அர்த்தம் பார்த்தால் அனர்த்தமாகிவிடும்.

அப்படித்தான் ஸவ்ய என்கிற சொல்லுக்கும் இடது என்றும் பொருள், வலது என்றும் பொருள்! அர்ஜுனனுக்கு ஸவ்ய ஸாசி என்று ஒரு பெயர் உண்டு. வலது கை மட்டுமின்றி, இடது கையாலும் அம்பு விடத் தெரிந்தவன் என்பதால் இந்தப் பெயர்!

இங்கே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் ஸவ்ய தக்ஷிண ஸேவிதா என்கிற நாமமானது, அம்பாளுக்கு இடது பக்கத்தில் ரமாவாக இருக்கக்கூடிய மஹாலக்ஷ்மியும் வலது பக்கத்தில் வாணியாக இருக்கக்கூடிய சரஸ்வதியும் நின்று சாமரம் வீச, **ஸசாமர ரமா வாணீ ஸவ்ய தக்ஷிண ஸேவிதா**வாக அம்பிகை வீற்றிருக்கிறாள் என்பதைக் குறிக்கிறது.

ஒவ்வொரு வார்த்தையையும் நாம் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் என்பதால் மட்டும் அல்ல; நமது தேசத்தின் பல்வேறு மொழி கிரந்தங்களையும் நாம் முறையாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதால். பின்வரக்கூடிய தலைமுறையினருக்கு, இந்த கிரந்தங்களில் எவ்வளவு ஆழமான பொருள் இருக்கிறது என்று எடுத்துச் சொல்ல வேண்டிய கடமை நமக்கு இருக்கிறது. நமது பாரம்பரியம் எவ்வளவு ஆழமானது என்பதைப் புரியவைக்க வேண்டிய

**அழுக்கோடு போய் நிற்கக் கூடியவர்களைக்கூட அம்பாளுடைய பார்வை தூய்மையாக்கிவிடும்.**

கடமை நமக்கு இருக்கிறது. நாம் சரியாகப் புரிந்து கொள்ளாமல் தவறாக அர்த்தம் கொண்டால், தலைமுறைகளுக்குத் தவறே தொடரும்! அப்படிப்பட்ட ஒரு சொல்தான் 'ஸவ்ய'!

### அளப்பரிய ஆற்றல்

அடுத்து வரும் திருநாமம் **ஆதி சக்தி**- எல்லாவற்றுக்கும் ஆதியான சக்தியாக இருக்கக்கூடியவள்.

**அமேயாத்மா** - இது இரு திருநாமங்களாகப் பிரியும்.

**அமேயா** - அளக்க முடியாதவள். அளப்பரிய ஆற்றல் படைத்தவள்.

**ஆத்மா** - எல்லாவற்றுக்கும் ஆத்ம ஸ்வரூபிணியாக இருக்கக்கூடியவள்.

**பரமா** - எல்லாவற்றையும் விட உத்கிருஷ்டமாக, உசத்தியாக இருக்கக்கூடியவள்.

**பாவனாக்ருதி** - பாவனத்தைத் தரக்கூடியவள். பாவனம் என்றால் பரிசுத்தம். தன் குழந்தைகளை, பக்தர்களை, பரிசுத்தமாக ஆக்கக்கூடியவள் பாவனாக்ருதி. அம்பாளுடைய பார்வையே பாவத்தையெல்லாம் போக்கிவிடும். அழுக்கோடு போய்



நிற்கக்கூடியவர்களைக் கூட முழுக்க முழுக் கத் தூய்மையாக மாற்றிவிடும்.

**அனேக கோடி பிரம்மாண்ட ஜனனி** - பாவனத்தைத் தரக்கூடிய அம்பாள்தான் கோடிக்கணக்கான பிரம்மாண்டங்களை யெல்லாம் படைத்தவள். அவற்றுக்குத் தாயாக இருக்கக்கூடியவள்.

அண்டம் என்றாலே நாம் இருக்கும் 'யூனிவர்ஸ்' என்று அர்த்தம். பிரம்மாண்டம் என்றால், இதுபோன்ற கணக்கற்ற அண்டங் கள் - போய்க் கொண்டேயிருக்கும்! இவை அத்தனையையும் அவள்தான் சிருஷ்டி செய்தாள்.

ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமம் என்பது என்றைக்கு ஏற்பட்டது? குறைந்தபட்சம் ஐந்து முதல் பத்தாயிரம் ஆண்டுகள் இருக் கும் என்றுதான் நாம் சொல்லலாம். ஆனால், பதினாறாம் நூற்றாண்டு வரை, அண்ட பகிரண்டங்கள் பல உண்டு என்பதை மேலைநாடுகள் ஒப்புக்கொள்ளவே யில்லை! வரலாற்றைக் கொஞ்சம் புரட்டிப் பார்த்தால் இது தெரியும். கோபர்னிகஸ் அண்ட அமைப்பைப் பற்றியும், சூரியன் தான் கிரஹங்களின் நடுவே உள்ளது, அதனைச் சுற்றித்தான் மற்ற கிரஹங்கள் உள்ளன என்று சொன்னதற்காகத் தண்டிக்கப் பட்டார்! நினைத்துப் பாருங்கள், இப்போது சமீபத்தில் இருபதாம் நூற்றாண்டில்தான், அவருக்கு இழைக்கப்பட்ட கொடுமைக்கு மன்னிப்பு கேட்கப்பட்டது!

### நமக்காக இறங்கி வருபவள்

அப்படியானால், நம் தேசத்தைச் சேர்ந்த மகான்கள் எவ்வளவு பெரிய விஷயங் களை, போகிற போக்கிலே சொன்னார்கள்! கஷ்டப்பட்டு நிரூபித்து அவர்கள் 'இப்படித் தான்' என்று நிரூபித்து முத்திரை குத்த வில்லை. ரொம்ப சகஜமாக, போகிற போக் கிலே பெரிய உண்மைகளைச் சொல்லி விட்டுப் போய்விட்டார்கள்.

ஆகவே, பார்க்கிற நம் பார்வை சரியாக இருந்தால், இந்தத் தேசத்தின் கிரந்தங்களில் எத்தனை விஷயங்களை நாம் சரியாகப் பார்க்க முடியும் என்பதை உணரும் கடமை நமக்கு இருக்கிறது.

**திவ்ய விக்ரஹா** - அனேக கோடி பிரம் மாண்டங்களை சிருஷ்டித்தவள் என்றால், எல்லாவற்றையும் தாண்டி, எங்கோ இருக் கிறாள் என்றல்லவா தோன்றும்? ஸ்வரூபமே இல்லாமல் நிர்க்குணமாக இருக்கிறாள் - எத்தனை கோடி ஒளி ஆண்டு களுக்கு அப்பால், எத்தனை அண்ட பகிரண் டங்களைப் படைத்தவள்! அவளை ஓர் உரு வத்தில், குணத்தில் அடக்க முடியுமா என் றால், முடியவே முடியாது! ஆனால், நமக்குப் புரிய வேண்டும் என்பதற்காக ஒரு சாதாரண வடிவத்தை எடுத்துக் கொண்டு அழகான விக்ரஹ தேவதையாகக் காட்சி தருகிறாள் ஸ்ரீலலிதாம்பிகை. ஆகவே **திவ்ய விக்ரஹா** என்கிற திருநாமம்.

மீண்டும் நேர்மாறான பொருள் தரும் இரண்டு நாமங்களை அருகருகே அனுபவித் துள்ளோம் - **அனேக கோடி பிரம்மாண்ட ஜனனி** - விவரிக்க முடியாத வடிவினள்; **திவ்ய விக்ரஹா** - அழகிய வடிவினள்!

**(வளரும்)**

# தேர்வு என்றதும் நினைவுக்கு வரும் விஷயங்களில் ஒன்று பறக்கும் படை. இந்தப் பறக்கும் படை எப்போது உருவானது? எப்படிச் செயல்படுகிறது?

● தமிழ்நாட்டில் புதிதாக மாற்றியமைக்கப்பட்ட பிளஸ்டு பாடத் திட்டத்தின் பின்னர் உருவானது, அரசு பொதுத் தேர்வு பறக்கும் படை. 1980லிருந்து இயங்கி வருகிறது. அனுபவம் வாய்ந்த ஆசிரியர்களே பறக்கும் படை உறுப்பினர்களாக நியமிக்கப்படுகிறார்கள். தேர்வு மையங்களில் சந்தேகப்படும்படியான மாணவனை ஆசிரியரும், மாணவியை ஆசிரியையும் பரிசோதிக்கின்றனர்.






● மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் அமைக்கும் பறக்கும் படை, மாவட்டக் கல்வி அலுவலர் அமைக்கும் பறக்கும் படை, மாவட்ட ஆட்சித் தலைவர் அமைக்கும் பறக்கும் படை என மூன்று நிலைகளில் ஒவ்வொரு மாவட்டத்திலும் செயல்படுகிறது, அரசு பொதுத் தேர்வு பறக்கும் படை. இதில் வெளி மாவட்டப் பறக்கும் படையும் வந்து போவது உண்டு. தேர்வு மையங்கள் ஒவ்வொன்றிலும், அருகாமைக் காவல் நிலையக் காவலர்கள் பாதுகாப்புப் பணியில் அமர்த்தப்படுகின்றனர்.

● மூன்று நிலைகளிலான பறக்கும் படையினர், ஒரே நேரத்தில் ஒரே தேர்வு மையத்தையே தேர்வு செய்து பார்வையிடுவதைத் தவிர்க்க முன்கூட்டியே சீரான முறையில் திட்டமிட்டுக் கொள்கின்றனர். சந்தேகத்துக்குரிய தேர்வு மையங்களுக்கு ஒருநாளில் வெவ்வேறு நேரங்களில் இரண்டு... மூன்று முறையென திடீர் விசிட் அடிப்பதும் உண்டு. சில மையங்களில் பறக்கும் படை உறுப்பினர்கள் நிரந்தரமாகத் தங்கி நோட்டம் விடுகிறார்கள்.

● ஒரு மாணவன் 'பிட்' அடித்து எழுதுகிறான். பிடிபட்டு விடுகிறான். அடுத்து என்ன நிகழ்கிறது? இதர மாணவர்களின்

# பலம் தரும் பறக்கும் படை!



சந்தானகோபால கிருஷ்ணன்



கி.சுவாமிநாதன்

கவனம் சிதறாமல் இருக்கவும், அவர்களுக்கு நேர விரயம் ஆகாமலிருக்கவும் பிடிபட்ட மாணவன் தேர்வு மையத்திலிருந்து வெளியே அழைத்து வரப்படுகிறான். விடைத்தாளில் அவன் பிடிபட்ட நேரம் குறிப்பிடப்படுகிறது. அவன் வைத்திருந்த 'பிட்' பேப்பர் அல்லது துண்டுச் சீட்டில், தேதியுடன் அவனது கையொப்பம் பெறப்படுகிறது. தேர்வு மையக் கண்காணிப்பாளர் மற்றும் பறக்கும் படையினரின் அறிக்கையுடன், அவனிடமிருந்து பெறப்பட்ட 'பிட்' துண்டுச் சீட்டு, வினாத்தாள் மற்றும் விடைத்தாள் போன்றவை மாணவனின் கண்ணெதிரே ஒரு உறையிலிடப்பட்டு, அந்தக் கவர் சென்னை அரசுத் தேர்வுத் துறை இயக்குனரகத்துக்கு அனுப்பி வைக்கப்படுகிறது. குறிப்பிட்ட மாணவனுக்குத் தண்டனை என்னவென்பதை அரசுத் தேர்வுத் துறை இயக்குனரகமே தீர்ப்பளிக்கிறது.

''தற்போது மைக்ரோ ஜெராக்ஸ் வந்துள்ளது. ஒரு பக்க மேட்டரை, ஒரு இஞ்ச் துண்டுச் சீட்டில் நகல் எடுத்து விடலாம். அதனை பிளாஸ்டிக் ஸ்கேல் விளிம்பில் பொருத்தப்பட்டிருக்கும் லென்ஸ் மூலமாக படித்து 'பிட்' எழுதுபவர்களும் உண்டு. இந்த வகையிலும் பலர் பிடிபட்டுள்ளனர். ஆள் மாறாட்டம் செய்தவர்களையும் பிடித்துள்ளோம். மொத்தத்தில், பறக்கும் படை கண்காணிப்பு தொடர்ந்து இருப்பதால் தேர்வு மையங்களில் தொண்ணூறு சதவிகிதத்துக்கும் மேலாக தற்போது ஒழுங்கீனங்கள் குறைந்தே போய் விட்டன!'' என்கிறார் பறக்கும் படையின் அனுபவம் நிறைந்தவரும், திருச்சி இ.ஆர். மேனிலைப் பள்ளி ஓவிய ஆசிரியருமான என். சந்தான கோபால கிருஷ்ணன்.

ஒழுங்கீனங்களில் ஈடுபடும் தேர்வெழுதுபவர்களுக்கு என்னென்ன தண்டனை எனக் குறிப்பிட்டு, தேர்வு மையங்கள் ஒவ்வொன்றிலும் போஸ்டர் ஒட்டப்பட்டுள்ளது. ''அரசுத் தேர்வுத் துறை மீதும், பொதுத்தேர்வுகள் மீதும் பொது மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கை நிலைக்க வேண்டும் என்பதே பள்ளிக் கல்வித் துறை அமைச்சரின் நோக்கம். பறக்கும் படையின் செயல்பாடுகளும், அரசுத் தேர்வுத் துறை இயக்குனரகத்தின் நடவடிக்கைகளும் ஒழுங்கீனங்களில் ஈடுபட நினைக்கும் மாணவ - மாணவியரை யோசிக்க வைத்துள்ளன. சுயமாகப் படித்துத் தேர்வு எழுதும் அளவுக்கு அவர்களைப் பலம்கொண்டவர்களாக மாற்றியுள்ளது அரசுப் பொதுத் தேர்வு பறக்கும் படை!'' எனக் கூறுகிறார் திருச்சி மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் முனைவர் கி.சுவாமிநாதன்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# கோகுலுடன் ஒரு சந்திப்பு

தமிழினியன்

அன்று கம்பெனி மருத்துவமனையில் கோகுலைப் பார்த்தேன்.

''வணக்கம் சார்... அடேயப்பா... எவ்வளவு நாளாச்சு! கடவுளைப் பார்த்தது போல் இருக்கு சார்'' என்று பூரண கும்ப மரியாதை.

''நல்லா இருக்கீங்களா கோகுல்? ரொம்ப மெலிஞ்சுட்டீங்களே'' என்றேன்.

''பாழாய்ப்போன சர்க்கரை சார். இந்தப்பாடு படுத்திடுச்சு.''

''ச்சோ...''

''போன வாரம் நம்ம ஆபீஸ் பக்கம் போயிருந்தேன். கண்றாவியா இருந்துச்சு சார். நீங்க இருந்தபோது ஆபீஸை எப்படி பக்காவா வச்சிருந்தீங்க. அது ஒரு பொற்காலம்னுதான் சொல்லணும். உங்களை மாதிரி சுறுசுறுப்பு யாருக்கும் வராது, சார்'' கூப்பிய கைகளை எடுக்காமல் பேசிக் கொண்டே போன கோகுலை இடை மறித்தேன்.

''டாக்டரைப் பார்த்துட்டீங்களா, கோகுல்?''

''ஓ... பார்த்துட்டு மருந்தும் வாங்கிட்டேன். இனி லால் குடிக்கு பஸ் பிடிக் கணும்.''

''பஸ் ஸ்டாண்டுக்கு எப்படிப் போவீங்க?''

''நடைராஜாதான்.''

''நடந்தா...?'' கோகுல் என்னிடம் உதவியாளராக இருந்தவர். ஓய்வுபெற்றதில் ஐந்தாண்டுகள் என்னை முந்திக் கொண்ட முதுமை. பஸ் நிலையம் சற்றுத் தொலைவு. தவிர வெயில் வேறு கொளுத்தியது. ''கொஞ்சம் இருங்க கோகுல். நான் டாக்டரைப் பார்த்துட்டேன். மருந்து வாங்கிட்டு வந்து உங்களை வண்டியிலே கொண்டு போய் விட்டுடறேன்'' என்றேன்.

''நன்றி சார்... நான் இப்படி மரத்தடியிலே நிற்கிறேன்.''

நாங்கள் பணியாற்றிய கம்பெனிக்குச் சொந்தமான மருத்துவமனை இது. ஓய்வு பெற்றவர்களுக்கும் இங்கே மருத்துவ வசதி உண்டு. இன்னொரு வசதி, சிகிச்சைக்காக வரும் பழைய நண்பர்களைச் சந்திக்கும் பரவசம். இன்றைய பரவசம் கோகுல்.

நான் மருந்து வாங்கும் இடத்துக்கு வந்த போது தேநீர் நேரம். மருந்து வழங்குபவர்கள் தனியறையில் அமர்ந்து தேநீர் உறிஞ்சிக் கொண்டிருந்தார்கள். காத்திருக்க வேண்டியதாயிற்று. வேறு என்ன செய்ய முடியும்? நாம் அவசரப்படுகிறோம் என்பதற்காக மற்றவர்கள் அனுசரிக்கும் நேரத்தைத் தவறு என்று சொல்ல முடியாதே.

கோகுல்தான் பாவம். காத்திருப்பார். சங்கடமாக இருந்தது. பத்து நிமிடம் கழித்து மருந்துடன் திரும்பிய போது பின்னால் நாராயணசாமி. எனக்கு மேலதிகாரியாக இருந்தவர். பல மாதங்களுக்குப் பிறகு சந்திக்கிறேன்.

''வணக்கம் சார்.''

''வணக்கம் ஆனந்தன். எப்படி இருக்கீங்க? உங்களிடம் ஒண்ணு கேட்கணும்னு இருந்தேன். உங்க கணேசபுரத்திலே பிளாட் எப்படி போகுது?''

''எதுக்கு சார் பிளாட்? நீங்கதான் எழில் நகரிலே வீடு கட்டிட்டீங்களே.''

''எனக்கில்லைப்பா. என் மகனுக்கு.



அவன் ஹைவேஸிலே ஜாயின் பண்ணிட்டான் தெரியுமில்லே. அவன் குழந்தை ஸ்கூலுக்குப் போக கணேசபுரம்தான் கிட்டேன்னு சொல்றான். அப்புறம் நம்ம கங்களாஞ்சேரி தாமோதரன் கேரளாவிலே தவறிட்டார்...''

''ச்சோ... ச்சோ... நல்ல மனுஷன்.''

''ம்... ம்... ரிடையராயிட்டா வாழ்க்கை நிச்சயமில்லாம் போயிடுதில்லே... சரி... சரி... நீங்கள் ஏதோ அவசரம் போல் தெரியுது. புறப்படுங்க.''

''வர்றேன் சார்... வணக்கம்.''

எட்டே தப்படியில் மருத்துவமனையை விட்டு வெளியே ஓடிவந்தேன்.

முதுகு காட்டி யாருடனோ பேசிக் கொண்டிருந்தார், கோகுல். குரலில் கார நெடி.

''பேருதான் சார் ஆனந்தன். ஆள் மகா சோம்பேறி. பாருங்களேன்... வயசான மனுஷனைக் காக்க வைச்சுட்டுப் போனோமேன்னு கொஞ்சமாவது அறிவு வேணாம்? போனால் போன இடம்... வந்தால் வந்த இடமா... சேச்சே... இந்தப் பொறுப்பில்லாத ஆளை நம்பி நின்னுட்டிருக்கேன் பாருங்க... என்னை அடிக்கணும்... செருப்பாலே.''

இனியும் அவரைப் பேசவிடுவது ஆபத்து.

''என்ன கோகுல்... போகலாமா?''

''அடடே! வந்துட்டீங்களா சார். உங்களைப் பற்றித்தான் சார்கிட்டே இந்நேரம் பேசிட்டிருந்தேன். உங்களை மாதிரி நல்லவங்களைப் பற்றி நாலு பேருகிட்டே சொன்னால்தான் மனசுக்குச் சந்தோஷமாக இருக்கு.''

என் இரு சக்கர வாகனத்தில் மிக வசதியாய் ஏறி உட்கார்ந்தார், கோகுல். ●



# கை கொடுக்கும் ஸ்க்ரைப்!

"எல்லோரும் பேனாவைப் பிடித்து எக்ஸாம் எழுதுவார்கள். நாங்கள் ஸ்க்ரைப்லால் எழுதுகிறோம். ஆம். எங்களுக்காகத் தேர்வு எழுதுபவர்களை நாங்கள் ஸ்க்ரைப்ஸ் என்றுதான் அழைப்போம்" என ஆரம்பிக்கிறார் 'வித்யாசாகரின்' துணை இயக்குனர் தீப்தி பாட்டியா.

இவரைப் போல பார்வை இழந்தவர்களுக்கும், கற்றலில் குறைபாடு உள்ளவர்களுக்கும் தேர்வு நேரங்களில் எழுதுகோலாக இருந்து செயல்படுபவர்கள்தான் ஸ்க்ரைப்ஸ்.

**ஸ்க்ரைப்ஸ்க்கென விதிமுறைகள் ஏதாவது இருக்கின்றனவா?**

"பல்கலைக்கழகப் பரீட்சைகளைப் பொறுத்தவரையில் சில விதிமுறைகள் ஸ்க்ரைப்ஸ்க்கென இருக்கின்றன. ஒன்று, தேர்வு எழுதும் மாணவர் எந்தத் துறையில் படிக்கிறாரோ அதே துறையைச் சேர்ந்தவராக ஸ்க்ரைப் இருக்கக் கூடாது.

இன்னொரு விதிமுறை பல்கலைக் கழகத் தேர்வுக்கென பார்வை இழந்த மாணவர்களோ அல்லது கற்றலில் குறைபாடு உள்ளவர்களோ தேர்வைச் சந்திக்கும் போது இவர்களை விட ஒரு வருடம் கல்வித் தகுதியில் குறைந்தவர்கள்தான் ஸ்க்ரைப்ஸாகத் தேர்வு எழுத வேண்டும். முதலாமாண்டு பி.ஏ. தேர்வு எழுதுபவர்களுக்கு +2 வகுப்பு வரை படித்தவர்கள் ஸ்க்ரைப்ஸாகவும், இரண்டாம் ஆண்டு தேர்வு எழுதுபவர்களுக்கு முதலாமாண்டு வரை படித்தவர்கள் என இப்படி ஸ்க்ரைப்ஸ் அமர்த்தப்படுவார்கள்.

பள்ளிக்கூடப் பொதுத் தேர்வு என எடுத்துக் கொண்டால், பத்தாம், பன்னிரண்டாம் வகுப்புத் தேர்வுகளின்போது செகண்டரி கிரேட் டீச்சர்ஸ் ஸ்க்ரைப்ஸாக இருப்பார்கள்."

**ஸ்க்ரைப்ஸ்களின் வழி தேர்வு எழுதுவதில் சந்திக்கக்கூடிய சவால்கள் என்ன?**

"நாம் தேர்ந்தெடுக்கும் பாடத் துறைக்குச் சற்றும் சம்பந்தமில்லாத ஒருவர் ஸ்க்ரைபாக வருவதே ஒரு பெரிய சவால்தான். குறிப்பாகக் கணக்கு மற்றும் அக்கவுன்டன்ஸி பாடத்தில் சின்ன ப்ராக்கெட் போடுவது, கிரெடிட் மற்றும் டெபிட் விவரங்களைச் சரியான பக்கத்தில் எழுதுவது - இவை சரியாக இருக்கின்றனவா என

பார்வை இழந்த மாணவரால் சரிபார்க்க முடியாத பட்சத்தில் அதுவே ஒரு பெரிய சவால்தான். அதைப் போலவே அறிவியல் பாடத்திலும் படங்களைச் சரியாக வரைந்து அந்தந்தப் பாகங்களை ஸ்க்ரைப் சரியாகத் தான் குறிப்பிட்டுள்ளாரா என்பதையும் சரிபார்க்க முடியாது. என்னதான் ஒரு மணி நேரம் ஸ்க்ரைப்ஸின் துணை கொள்பவர்களுக்குக் கூடுதலாகக் கொடுத்தாலும், சில சமயங்களில் கடினமான ஆங்கில வார்த்தைகளுக்கு ஸ்பெல்லிங் சொல்வதிலேயே பாதி





**''நாங்கள் எதிர்பார்ப்பது எல்லாம் எப்போதுமே சில வசதிகள்தானே தவிர ஒரு பொழுதும் சலுகைகள் கிடையாது.''**

* ராஜீவ்ராஜன்

* தீப்தி பாட்டியா

நேரம் ஓடி விடும். நாங்கள் எதிர்பார்ப்பது எல்லாம் எப்போதுமே சில வசதிகள்தானே தவிர ஒரு பொழுதும் சலுகைகள் கிடையாது'' என்கிறார் தீப்தி பாட்டியா.

''நான் 1993-ல் பத்தாம் வகுப்புக்கான பொதுத் தேர்வு எழுதும்போதுதான் என்னைப் போல செரிபிரல் பால்ஸியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு நான் பேசுவதைப் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு ஸ்க்ரைப் தேவை என்பதை வலியுறுத்தினேன். 2007ல் PG Diploma (Human rights) தேர்வு எழுதும்போது ஸ்க்ரைப் கிடைக்க ரொம்பப் போராடினேன். என்னைப் போலவே ஸ்க்ரைபின் துணை நாடுவோருக்கு அவர்களது சேவை சுலபமாகக் கிடைக்க வேண்டும் என்பதற்காக வாசவி சுந்தரத்துடன் இணைந்து துவக்கப்பட்ட இணையதளம்தான் www.iscribe.co.in" என்கிறார் வித்யாசாகரின் ஊனமுற்றோருக்கான சட்டமையத்தின் ஒருங்கிணைப்பாளர் ராஜீவ் ராஜன்.

''நம்மால் முடிந்த சிறு உதவியை இச் சமூகத்துக்குப் புரிந்திட வேண்டும் என்ற ஆவல் பலரிடம் இருக்கும். தேர்வு நேரங்களில் பார்வை இழந்தவர்களுக்கும், கற்றலில் குறைபாடு உள்ளவர்களுக்கும் சேவை செய்ய ஆசையும் பலரிடம் இருக்கும். ஆனால் யாரை, எங்கே, எப்படித் தொடர்பு கொள்வது என்ற கேள்விகளோடு இருப்பவர்களுக்காக விடையளிக்கவே இந்த இணையதளம் செயல்பட்டு வருகிறது. ஸ்க்ரைபாக சேவை செய்ய நினைப்பவர்களுக்கும், ஸ்க்ரைபின் தேவை வேண்டுபவர்களுக்கும் ஒரு பாலமாக இருந்து செயல்பட்டு வரும் இந்த இணையதளத்தில் இதுவரை ஆயிரத்துக்கும் மேற்பட்டோர் தங்களை இணைத்துக் கொண்டுள்ளனர்'' என்கிறார் ஸ்கிரைப்பின் ஒருங்கிணைப்பாளர் மஹேஸ்வரி நரசிம்மன்.

**- நளினி சம்பத்குமார்**

# 'என் விஷயத்தில் தலையிடாதே!"

டாக்டர் விஜய் நாகஸ்வாமி

"திருமணம் என்பது தனிமனித சுதந்திரத்தில் மூக்கை நுழைக்கும் என்பது பலரது அசைக்க முடியாத கருத்து. அதனாலேயே திருமணமான புதிதில், 'என் விஷயத்தில் தலையிடாதே ப்ளீஸ்!' என்று மனைவியிடம் கண்டிப்பான குரலில் சொல்லிவிடுகிறார்கள். மனைவிகள்கூட



இப்படிச் சொல்வதுண்டு. ஒருவர் மற்றவருடைய தவறைச் சுட்டிக்காட்டும்போது சரியா? தவறா? என்று யோசித்துப் பார்க்காமல், 'அடுத்தவர் என்ன நம்மைக் குறை சொல்வது?' என்ற மனப்பான்மைதான் மேலோங்கி நிற்கிறது. இதுபோல பல கேஸ்களை என் அனுபவத்திலே கண்டிருக்கிறேன்.

உலகத்தில் நிலையான ஒன்று மாற்றம். அதனை வாழ்க்கையில் தவிர்க்கவே முடியாது. மாற்றம் நடக்கிறபோது நீங்கள் அதை விரும்புகிறீர்களா? இல்லையா? என்று பர்மிஷன் கேட்டுக் கொண்டிருக்காது. அதுபாட்டுக்கு நிகழும். மாற்றங்களைச் சந்திப்பதற்கு நாம் நம்மைத் தயார்ப்படுத்திக் கொள்ளவேண்டும். திருமணம் என்பது ஆண் அல்லது பெண்ணின் வாழ்க்கையில் மிக முக்கியமான ஒரு மாற்றம் நிகழும் கட்டம்.

வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்று நாம் பல சுயமுன்னேற்றப் புத்தகங்களைப் படிப்பதும், சொற்பொழிவுகளைக் கேட்பதும் உண்டல்லவா? எதற்காக?

வாழ்க்கையில் நல்லதொரு முன்னேற்றம் நிகழ வேண்டும் என்பதால்தானே? முன்னேற்றமும் ஒரு வகை மாற்றம்தானே? அப்படிப்பட்ட ஒரு நன்மை விளைய நம் கணவரோ, மனைவியோ குறைகளைச் சுட்டிக்காட்டும்போது, அதைத் திறந்த மனத்துடன் ஏற்றுக்கொள்ளும் மனப் பக்குவம் அவசியம். ஆரம்பத்தில் இது கொஞ்சம் சிரமமாகத்தான் இருக்கும். ஆனால், அதைச் சமாளித்து, திருமண உறவைப் பலப்படுத்திக் கொள்வது நம் கையில்தான் இருக்கிறது.

**எ**திர்பார்ப்பு: மண வாழ்க்கையில் கணவன் மனைவிக்கு இடையில் இருக்கும் பெரிய தடை இது. திருமணம் செய்து கொள்ளும் ஒவ்வொரு ஆணுக்கும் தன் மனைவி இப்படி இருக்க வேண்டும் என்றும், ஒவ்வொரு பெண்ணுக்கும் தன் கணவன் இப்படி இருக்க வேண்டும் என்றும் ஒருவித எதிர்பார்ப்பு இருக்கும். இந்த எதிர்பார்ப்புகள் ஒவ்வொருவரும் பிறந்து வளர்ந்த சூழ்நிலையைப் பொறுத்தும், அவர்கள் நெருக்கத்தில் பார்த்த தம்பதிகளின் வாழ்க்கையைப் பொறுத்தும் மாறுபடும். இந்த எதிர்பார்ப்பினை உருவாக்குவதில் இன்றைய காலகட்டத்தில் பத்திரிகைகள், டி.வி. சினிமா மற்றும் சமூகத்தின் இன்ஃப்ளுயன்சும் அதிகமாக இருக்கிறது.

இருவருடைய எதிர்பார்ப்புகளையும் வெளிப்படையாகப் பகிர்ந்து கொண்டாலும் கூட அவற்றை பரஸ்பரம் நிறைவேற்றிக்கொள்வது என்பது சாத்தியமில்லை. கூடிய வரை ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுத்து, அதே சமயம் அடுத்தவரது கருத்துக்கு மதிப்பளித்து நடந்து கொள்வதுதான் யதார்த்தமான அணுகுமுறை.

சரி! ஒருவருக்கொருவர் எதிர்பார்ப்பு என்ன என்பதைத் தெளிவாக எடுத்துச் சொல்லியாகிவிட்டது. ஆனால், அதை நிறைவேற்றுவதிலே சிக்கல் என வைத்துக் கொள்வோம். உதாரணமாக, விக்கி எப்போதாவது நண்பர்கள் அளிக்கும் பார்ட்டிகளுக்குப் போகிறபோது ரெண்டு பெக் மது அருந்துவான். இதைத் திருமணமானவுடன் கேஷுவலாக ஷாலினியிடமும் மறைக்காமல் சொல்லிவிட்டான். ஷாலினி அதைக் கடுமையாக ஆட்சேபித்தாள். இனி மதுவைத் தொடக்கூடாது என்று உத்தரவே போட்டுவிட்டாள். அதற்கு அவள் சொன்ன காரணம்: 'மது ஒரு மனிதனை எந்த அளவுக்குச் சீரழிக்கும் என்பதை நான் நேரடியாக என் மாமா ஒருவரது வாழ்க்கையின்மூலம் தெரிந்து கொண்டேன்.'



இந்தச் சூழ்நிலையில் மேற்கொண்டு என்ன செய்ய? ஷாலினியின் மனநிலையைப் புரிந்து கொண்டு, அதற்கு மதிப்பளித்து, விக்கி எப்போதாவது மது அருந்துவதையும் விட்டு விடலாம். அல்லது, தன்னைப் போன்று எப்போதாவது ஒருமுறை மது அருந்துகிறவருக்கும், குடித்தே வாழ்க்கையைச் சீரழித்துக் கொள்கிறவருக்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துச் சொல்லி, ஷாலினியின் பயத்தைப் போக்கலாம். இரண்டும் இல்லாமல், ''என் விஷயத்தில் தலையிடாதே! நான் ஒன்றும் உன் மாமா போல குடிகாரன் இல்லை'' என்று கடிந்து பேசி அவள் அக்கறையை உதாசினப்படுத்தி விட்டால், அவர்களுக்கு இடையில் சுமுக உறவு எப்படி மலரும்? யோசித்துப் பாருங்கள்.

**கூடிய வரை ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுத்து, அதே சமயம் அடுத்தவரது கருத்துக்கு மதிப்பளித்து நடந்துகொள்வதுதான் யதார்த்தமான அணுகுமுறை.**



ரஞ்சித்-பிஜு திருமணமாகி நாலைந்து வருடங்களாகிவிட்டன. ஒவ்வொரு வருடமும், ரஞ்சித்தின் பிறந்த நாளன்று காலையில் ஒரு கிரீட்டிங் கார்டும், சிறிய பரிசும் ஞாபகமாகக் கொடுப்பாள் பிஜு. இப்படிப்பட்ட பிஜுவுக்கு, தன் பிறந்த நாளன்று ரஞ்சித்தும் வாழ்த்து சொல்லி, பரிசளிக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு இருக்குமில்லையா? ஆனால், நம்ம சாருக்கு மனைவியின் பிறந்த நாள் ஞாபகமிருக்காது.

''உன் பிறந்த நாளை மறக்காமல், நான் கார்டு கொடுத்தேனில்லையா? என் பிறந்த நாளை நீ எப்படி மறக்கலாம்?'' என்று பிஜு கோபப்பட்டால், தன் மறதிக்காக ஒரு ஸாரி சொல்வதற்குப் பதிலாக, ''என் பிறந்த நாளுக்கு கிஃப்ட் கொடு என்று நான் கேட்டேனா?'' என்று பொறிந்து தள்ளிவிட, அடுத்த நாலு நாட்களுக்கு பிஜு மூட் அவுட்.

இங்கே கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், பிஜு ரஞ்சித்துக்கு கிஃப்ட் கொடுத்தாலும், ரஞ்சித்தின் குணத்தைப் புரிந்துகொண்டு தன் எதிர்பார்ப்பைக் கைவிட்டிருக்கவேண்டும். அடுத்தவர் எதிர்பார்க்காத ஒன்றைத் தன் விருப்பத்தின் பேரில் செய்துவிட்டு, அதை அவர் தனக்குத் திரும்பச் செய்ய வேண்டும் என்று நினைப்பதில் அர்த்தமில்லை.

ஒரு மனைவி, கணவனிடம் இப்படி ஒரு சிறிய எதிர்பார்ப்பைக் கூட வைத்துக் கொள்ளக்கூடாதா? என்று சிலருக்குத் தோன்றலாம். ஒரு விதத்தில் பார்த்தால் அதுகூடச் சரிதான். அப்போது என்ன செய்ய வேண்டும்? தன் எதிர்பார்ப்பு என்ன என்பதை அடுத்தவருக்கு சந்தேகத்துக்கு இடமின்றி, புரியும் விதத்தில் தெளிவாகச் சொல்லி விட வேண்டும். இந்த அண்டர்ஸ்டாண்டிங்கும், கம்யூனிகேஷனும், இன்றைய மாடர்ன் தம்பதிகளுக்கு ரொம்ப ரொம்ப அவசியம். அதற்கான நேரத்தையும் பொறுமையையும் கைக்கொண்டால், சண்டையில் வீணாகும் நேரம் கணிசமாகக் குறையும்.

(இத்தொடரில் இடம்பெறும் பெயர்கள் கற்பனை; படங்களில் உள்ள மாடல்களுக்குச் சம்பவங்களுடன் தொடர்பில்லை)

*(அழைப்பு அடுத்த இதழில்நிறைவுறும்.)*

எழுத்து வடிவம் : **எஸ்.சந்திரமௌலி**

# எக்ஸாம் ஃபுட்!

"இது பரீட்சை சீஸன். நிறைய மார்க் வாங்கி பாஸ் பண்ண, எப்படிப் படிக்கிறீர்கள் என்பதோடு என்ன சாப்பிடுகிறீர்கள் என்பதும் மிக முக்கியம். என் இரண்டு மகன்களும் பள்ளி, கல்லூரியில் படித்தபோது பரீட்சை நேரத்தில் அவர்களுடைய உணவு விஷயத்தில் மிகவும் கவனமாக இருப்பேன்" என்கிறார் சமையலறை ராணியான மல்லிகா பத்ரிநாத். அவர் கொடுத்த டிப்ஸ்:



■ மல்லிகா பத்ரிநாத்

- ஃப்ரெஷ் பழ ஜூஸ்கள் நிறையச் சாப்பிடுங்கள். சர்க்கரை அல்லது தேன் சேர்க்கலாம். அல்லது மில்க் ஷேக் செய்தும் சாப்பிடலாம்.
- கார்பன்-டை-ஆக்ஸைடு அதிகம் கொண்ட குளிர் பானங்களைக் கண்டிப்பாகத் தவிர்க்கவும்.
- ஒருநாளில் இரண்டு முறைக்கு மேல் காப்பி, டீ வேண்டாம். பால் நிறையக் குடியுங்கள். வெறும் பால் குடிக்கப் பிடிக்காதா? ஏதாவது எசென்ஸ் அல்லது சிரப் சேர்த்து சுவை கூட்டிக் கொள்ளுங்கள்.
- ஏதாவது கொறிக்க வேண்டும் போல் இருந்தால் சுண்டல், பாப் கார்ன், வெள்ளரிக்காய் போன்றவற்றைச் சாப்பிடலாம்.
- மற்றெந்த வகை பிரெட்களையும் விட, பல தானியங்கள் கொண்டு செய்த மல்டி கிரெய்ன் பிரெட் சாப்பிடுங்கள்.
- நிறையப் பழங்கள் சாப்பிடுங்கள். பழங்களைச் சிறு துண்டுகளாக நறுக்கி, மேலே சாட் மசாலா தூவிச் சாப்பிட்டால் சுவையாக இருக்கும்; உடம்புக்கும் நல்லது.
- வேகவைத்த சர்க்கரை வள்ளிக்கிழங்கு சாப்பிடலாம்.
- ஒரு நெல்லிக்காய், சிறிய மாங்காய் ஒன்று, அரை அங்குல இஞ்சித் துண்டு, சின்ன பச்சை மிளகாய், கறிவேப்பிலை, கொஞ்சம் தாராளமாகவே கொத்துமல்லி - இவற்றைத் தண்ணீர் விட்டு நன்றாக அரைத்து, அரை லிட்டர் தயிரில் கலந்து நன்றாகக் கடைந்து கடுகு, பெருங்காயம் தாளித்துக் கொட்டி வைத்து விடுங்கள். அதை அவ்வப்போது குடித்தால் நன்றாக இருக்கும்.
- எண்ணெயில் பொறித்த உணவுப் பண்டங்களையும், தின்பண்டங்களையும் கண்டிப்பாகத் தவிர்க்கவும்.

– மானஸா

● அ.ஷண்முகசுந்தரம், பெங்களூர்

**தாலியில் மூன்று முடிச்சுகள், மணமகனுக்கு வாய்க்கட்டு, கைக்கட்டு, கால் கட்டைக் குறிக்கின்றன என்கிறார்கள். மணமகளுக்கு...?**

வாய்க்கு ருசியாக சமைத்துப் போடும் வாய்க்கட்டு... வாரி அணைத்து வழங்கும் கைக்கட்டு... பட்ட காலிலே படாமல் இருக்க, தவிர்க்கும் பாதுகாப்பான கால் கட்டு...?

● கதிர்வேல், வடசென்னை

**கடவுள் நம்பிக்கை அவசியமா...?**

கடவுள் நம்பிக்கை 'Helmet' மாதிரி. விபத்து நடக்காத வரையில் வேஸ்ட்டாகத் தான் தோன்றும். கஷ்டம் வரும்போது இந்த Helmet தான் காக்கும் 'Heaven-met'.

● ஸ்வப்னா, சென்னை

**எலெக்ஷன் வருவதால் ஐ.பி.எல் மேட்ச் இந்தியாவில் இடையாதாமே...?**

எலெக்ஷனும் I.P.L தானே. Indian Parliamentary League மேட்ச்.

● ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி

**அது என்ன உப்பிட்டவரை உள்ளளவும் நினை...?**

அதெல்லாம் ஆரோக்கியமாக இருந்த அந்தக் காலம்; இப்ப இருக்கற BPக்கு, உப்பிட்டவரை உள்ளளவும் கரிச்சுக் கொட்டு!

● வி.எஸ்.கீர்த்தனா, ஈரோடு

**பகவான் கிருஷ்ணரை நேரில் பார்த்தால் என்ன கேட்பீர்கள்...?**

ராமர் பாலம் கட்டினாரா...?

● ச.நாராயணன், பாளையங்கோட்டை

**பெண்களின் அழகுக்கு அளவுகோல் என்ன...?**

பார்ப்பவர்களின் அளவு Goalஐப் பொறுத்தது.

● ராணிமேரி, விழுப்புரம்

**மனிதனுக்கு 'வால்' முளைத்தால்...?**

மிருகத்துக்கு ச'வால்'

● மு.மதிவாணன், அரூர்

**கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம். பள்ளி இல்லா ஊரில்...?**



# மனிதனுக்கு 'வால்' முளைத்தால்..?

கோயில் செய்குவோம். பின் குடி புகுவோம். அதன் பின் எழுத்தறிவிப்பவன் பாடு.

● ஹேமமாலினி, சென்னை

**யாரை வாழ்க்கையில் அவசியம் பின்பற்ற வேண்டும்?**

நம்மிடம் கடன் வாங்கியவனை.

● வாசுதேவன்,
அயிரோலி

பணம் என்று ஒன்று இல்லாமலிருந்தால்?

சில்லறைத்தனம் என்று ஒன்று இல்லாமல் போயிருக்கும்.

● ச.அ.கேசவன்,
இனாம் மணியாச்சி

பலப் பல இரவுகளைக் கடந்தும் இல்வாழ்க்கை தொடங்கும் இரவை 'முதல் இரவு' எனக் குறிப்பிடுவதேன்...?

முழித்துக்கொண்டிருக்கும் இரவுதான், முதல் இரவு...!

வார்த்தையிலேயே ரெட்டை வாலா இருக்கிற ஆசாமிகளை என்ன செய்யறது?

● லலிதா செல்லப்பா, பம்மல்

தன்னடக்கம், கோழைத்தனம் இரண்டும் அமைதியாக இருப்பதுதானே...?

'தூக்கம், மரணம் இரண்டும் அசையாமல் இருப்பதுதானே? தன்னடக்கம் அமைதியான தூக்கம்; கோழைத்தனம் அகால மரணம்.

● அ.பேச்சியப்பன், ராஜபாளையம்

பெண்களுக்கு உதவியாக ஆண்கள் வீட்டு வேலை செய்யலாமா...?

வழக்கத்தை மாத்தாதீங்க. Go Ahead.!

● ம. வேல்விழி, ஜமுனாமரத்தூர்

திருவண்ணாமலை என்றதும் உங்கள் நினைவுக்கு வருவது ஏது?

பரணீதரனின் 'அருணாசல மகிமை'. படித்தால் உட்கார்ந்த இடத்திலேயே 'கிரிவலம்' செய்த உன்னத அனுபவத்தைக் கொடுக்கும் நூல். ஒரு காலத்தில் பரணீதரனின் இந்த நூலைப் படித்துவிட்டு நான் திருவண்ணாமலைக்கு ஓடிப் போவதாக இருந்தேன். மெரினாவின் நாடகங்களைப் பார்த்துவிட்டு ஓடிப்போவதை ஒத்திப் போட்டு, நாடக ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கிறேன். நாடகம் அறிய மெரினா; 'நான் யார்?' அறிய ரமணர்; ரமணரை அறிய பரணீதரன்; பரணீதரன் தான் மெரினா.

## குறும்படம்

**ம**துரையிலிருந்து பத்து கி.மீ. தூரத்தில் இருக்கிறது முனியாண்டிபுரம் கிராமம். ஊருக்கு ஒதுக்குப்புறமாக கல் ஒட்டர்களின் குடியிருப்பு. நள்ளிரவின் அமைதியைக் கலகலக்க வைக்கும் விதமாக, காவல் துறை ஜீப் அந்தக் குடியிருப்புப் பகுதிக்கு விரைகிறது. மாரியம்மாள் வீட்டின் முன் நிற்கிறது. பூட்ஸ் கால்களுடன் வீட்டின் உள்ளே நுழையும் காவலர்கள் மாரியம் மாளின் இரண்டு மகன்களைக் கொத்தாக படுக்கையிலிருந்து தூக்கி ஜீப்பில் அள்ளிப் போட்டுக் கொண்டு கிளம்புகிறார்கள். மாரியம்மாள் ''அய்யோ... அம்மா...'' என்று கதறும் குரல் கேட்டு பெண்களும் ஆண்களும் ஓடி வருகின்றனர். ''இன்னிக்கு உன் பையன்களா?'' என்று கலங்கி நிற்கிறார்கள் அவர்கள்.

மறுநாள் காலை காவல் கண்காணிப் பாளர் அலுவலகத்துக்குப் போய் விசாரிக் கிறாள் மாரியம்மாள். ''உன்னோட பசங்க நாகர்கோவில் ஜெயில்ல இருக்காங்க'' என்று தகவல் சொல்கிறார்கள்.

''ஐயோ... ஒரு குத்தமும் செய்யாத பசங்களைப் பிடித்துக் கொண்டு போய் விட்டார்களே'' என்று சுவரில் மோதிக் கதறுகிறாள் மாரியம்மாள்.

**மா**ரியம்மாள் யார்? அவரது மகன்களைக் காவல் துறை நள்ளிரவில் ஏன் பிடித் துக் கொண்டு போக வேண் டும்? இந்தக் கேள்விகளுக் கான விடை காண முன்னூறு ஆண்டு கால சரித்திரத்தைப் பார்க்க வேண்டும்.

**இ**ந்தியாவின் பல பகுதிகளில் சில குறிப்பிட்ட இன மக்கள் ஆங்கிலே யர்களுக்குப் பெரிய சவாலாக இருந்தால் அவர்களை வேட்டையாட முனைந்தது அப்போதைய ஆங்கில அரசு. இதன் காரணமாக ஊரைவிட்டு அவ்வப்போது பயணம் புறப்பட்ட ஒரு இன மக்களுக்குக் கை கொடுத்தது கல் உடைக்கும் தொழில். அம்மி கொத்துவது, ஆட்டுரல் கொத்துவது போன்ற வேலைகளையும் அவர்கள் பிழைப்புக்காகச் செய்தார்கள். சிலர் கல்லிலே கலைவண்ணம் கண்டார்கள். அவர்கள் கல் ஒட்டர்கள் என்று அழைக் கப்பட்டார்கள். அதே சமயம் சின்னச் சின்னக் குற்றங்களைச் செய்வதிலும் அவர்கள் இறங்கினார்கள். ஆங்கிலேய அரசுக்கு இது வசதியாகப் போய்விட்டது. சிலர் செய்த திருட்டுத் தொழிலைக் காரண மாக வைத்து, அந்த இன மக்களையே குற்றப் பரம்பரையாக அறிவித்து டார்கெட் செய்யத் துவங்கி விட்டது.

காவல் துறைக்குப் பயந்து ஊர், ஊராக ஓடத்துவங்கினார்கள் கல் ஒட்டர்கள். திருட்டுக் குற்றங்களில் காவல் துறைக்குக் குற்றவாளிகள் கிடைக்காவிட்டால் அப் பாவிகளான கல் ஒட்டர்களைப் பிடித்துக் கொண்டுபோய் அடித்து, உதைத்து,



நீதிமன்றத்தில் நிறுத்தி தண்டனை வாங்கிக் கொடுத்து விடுவார்கள்.

ஆங்கிலேயர் ஆட்சியில்தான் இந்த அவல நிலை இருந்தது என்றால், சுதந்திரத்துக்குப் பிறகும் இது தொடர்கிறது. இன்றைக்கு கல் ஒட்டர்களில் பெரும் பாலோர், திருந்தி சமூகத்துடன் இணக்கமாக வாழ நினைக்கும் நிலையில், அவர்களைக் குற்றப் பரம்பரை யாகவே இன்னமும் வைத்திருக்கிறது காவல் துறை.

அப்பாவிகளைப் பிடித்துக் கொண்டு போய் அன்றாட வாழ்க்கையை எரிமலையாக்கும் போக்கைக் கண்டு குமுறுகிறது ஒட்டர் சமூகம். ''இதற்கு விடிவே கிடை யாதா?'' என்று ஏங்குகிறது.

அந்த ஒட்டர்களின் குமுறலைத்தான் 'ஆராயா தீர்ப்பு' என்று குறும்படமாக தயாரித்திருக்கிறார் பி.இளங் கோவன். பத்திரிகையாளராகப் பணியாற்றி, பின்னர் இந்திய ரயில்வே பணி யில் இப்போது உயர் அதிகாரியாக இருக்கிறார்.

சீர் மரபினர் என்று இன்று அழைக்கப்படுகின்றனர் இந்த இனத்தினர். அரசு இவர்களுக் குப் பல சலுகைகளும் வழங்கியுள்ளது. அந்தச் சலுகைகளைப் பயன்படுத்திக்கொண்டு ஒட்டர்களைத் தவிர, இச்சமூகத்தின் இதர பிரிவினர் ஓரளவு முன்னேறிவிட்டனர். குற்றப் பரம்பரை எனப் படும் முத்திரை அவர்களுக்கு நீங்கிவிட்டது. ஆனால், ஒட்டர்கள் மீது அது நீடிக்கிறது.

*மரியம்மாள்*

# ஆராயா தீர்ப்பு!

காவல் துறையைக் கேட்டால் ஒட்டர்களில் சிலர் இன்னமும் குற்றங்கள் செய்வதாகச் சொல் கிறார்கள். ஆனால், தன்னார்வத் தொண்டு அமைப்புகள், மனித உரிமை ஆர்வலர்கள், தீர விசாரித்த அளவில் இதை மறுக்கின்றனர்.

''ஏதும் குற்றம் செய்யாத அப்பாவிகள் மீதும் பழி போடப்படும்போது, அவர்கள் உள்ளம் குமுறத் தானே செய்யும்! செய்யாத குற்றத்துக்குத் தண்டனை அனுபவிப்பதற்குப் பதிலாக, திருட்டைச் செய்துவிட்டே சிறைக்குப் போகலாமே என்று அந்த இளைஞர்கள் எண்ணத் துவங்கி இருக் கிறார்கள். ''குற்றம் சுமத்து வதற்கென்றே ஒரு சமூகத்தை இன்னமும் எத்தனை காலம் தான் வைத்திருக்கப்போகி றோமோ?'' என்று ஆதங்கத் துடன் கேட்கிறார் இளங் கோவன்.

* பி. இளங்கோவன்



**- ப்ரியன்**

# ஏலம் விடப்பட்டதா

அண்மையில் மகாத்மா காந்தி பயன்படுத்திய மூக்குக் கண்ணாடி, செயின் இணைத்த கடிகாரம் போன்ற பொருட்கள் அமெரிக்காவில் ஏலத்துக்கு வர, அவற்றை இந்தியத் தொழிலதிபரான விஜய் மல்லைய்யா வாங்கியது உலகமெங்கும் பரபரப்பூட்டிய செய்தி. ஆனால், அந்தப் பொருட்கள் சில ஆண்டுகளுக்கு முன்னால் டெல்லியில் உள்ள தேசிய காந்தி மியூஸியத்தில் வைக்கப்பட்டிருந்தன. அவற்றை யாரோ களவாடிச் சென்று, கைமாறி, ஏலமும் விடப்பட்டுள்ளன என்று குற்றம் சாட்டுகிறார் ராம்மோகன். காந்தியக் கொள்கைகளில் தீவிரப் பற்றுடைய இவர், மகாத்மாவின் சத்தியாகிரகப் போராட்டங்கள் குறித்து ஆராய்ச்சிகள் செய்தவர். இந்தியாவிலும், இங்கிலாந்திலும் மகாத்மாவுடன் தொடர்புடைய பல்வேறு இடங்களையும் சென்று பார்த்தவர். காந்திஜி குறித்த புத்தகங்கள் அடங்கிய பிரத்யேகமான 'காந்தி நூலகம்' வைத்திருப்பவர்.





''நான் இந்தியா மற்றும் லண்டனில் மகாத்மா காந்தி பற்றி பல சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளேன். அப்போது காந்திஜி குறித்த ஏராளமான வண்ணப் புகைப்பட ஸ்லைடுகளைப் பயன்படுத்துவது வழக்கம். அதற்காக, காந்திஜி தொடர்புடைய இடங்களுக்குச் செல்லும்போதெல்லாம் மறக்காமல் புகைப்படம் எடுப்பேன். அப்படித்தான் 1990 மார்ச்சில் டெல்லியில் உள்ள காந்தி மியூஸியத்துக்குச் சென்றிருந்தேன். அங்கே எடுத்த எட்டு ஸ்லைடுகளை ஆதாரமாகக் கொண்டுதான் இப்போது ஏலம் விடப்பட்ட பொருட்கள் அதிலும் குறிப்பாக செயின் இணைக்கப்பட்ட கடிகாரம், தோல் செருப்பு ஜோடி - இரண்டும் டெல்லி காந்தி மியூஸியத்திலிருந்து களவாடப்பட்டவை என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்கிறேன்'' என்கிறார் ராம்மோகன்.

உலகமே போற்றும் ஒரு மாமனிதரான காந்திஜி மறைந்த போது அவருக்குச் சொந்தமான பொருட்கள் என்னென்ன என்று ஆராய்ச்சி செய்து 2004ல் ராம்மோகன் ஒரு புத்தகம் எழுதியுள்ளார். காந்தி கல்விக் கழகத்தால் வெளியிடப்பட்டு, பெரிதும் பாராட்டப்பட்டது அந்தப் புத்தகம்.

''மீண்டும் 2008ல் டெல்லி காந்தி மியூஸியத்துக்குச் சென்றபோது அங்கே கடிகாரமும் தோல் செருப்பும் இல்லை.

அவை எங்கே? என்று விசாரித்தேன். அப்படி எதுவுமே கிடையாதே என்பதுதான் எனக்குக் கிடைத்த பதில். அதற்கு என்ன அர்த்தம் என்பது ஏலம் பற்றின செய்தி வெளியானபோது புரிந்தது. 1990இல் நான் பார்த்த கடிகாரமும், தோல் செருப்பும்தான் இப்போது ஏலம் விடப்பட்டவை'' என்று அடித்துச் சொல்கிறார் ராம்மோகன்.

இதுகுறித்து காந்திஜியிடம் உதவியாள ராக இருந்த கல்யாணம் அவர்களிடம் கருத்து கேட்டபோது... ''காந்திஜி தாம் பயன்படுத்திய பொருட்களை, சிலருக்குப் பரிசாக அளித்ததாகச் சொல்கிறார்கள். அப்படி வழங்கப்பட்டவைதான் அண்மையில் ஏலத்துக்கு வந்ததாக ஏலக் கம்பெனியினர் கூறியுள்ளனர். எனக்குத் தெரிந்து 1947ல் ஒருநாள் காந்திஜி ரயிலில் பயணம் செய்த போது அவர் இடுப்பில் செயின் மூலம் இணைத்திருந்த கடிகாரம் காணாமல் போய் விட்டது.

# நேர்மை...?



✱ ராம்மோகன்



✱ கல்யாணம்

அதே போல காந்திஜி சுடப்பட்ட சமயத்தில் தரையில் விழுந்த அவரது மூக்குக் கண்ணாடி அதன் பிறகு கிடைக்கவே இல்லை. மற்றபடி இந்த சர்ச்சை குறித்து கருத்து தெரிவிக்கும் அளவுக்கு எனக்கு வேறு தகவல் எதுவும் தெரியாது'' என்றார்.

''காந்திஜியின் பொருட்கள் இந்தியாவுக்கு மீட்டுக் கொண்டுவரப்பட்டு விட்டதாக யாரும் பெருமைப்பட வேண்டாம். அவை எப்படி இந்தியாவை விட்டு வெளியே போயின என்று முழுமையான விசாரணை தேவை'' என்று கொதிக்கிறார்



ராம்மோகன்.

டெல்லியிலுள்ள காந்தி மியூசியத்தின் இயக்குனர் டாக்டர் வர்ஷா தாஸ் என்பவரைத் தொடர்பு கொண்டு கேட்க... ''இதுபோன்ற சர்ச்சைகள் அவ்வப்போது எழும். நாங்கள் காந்தி சம்பந்தப்பட்ட பொருட்களைப் பாதுகாப்பாகவே வைத்துள்ளோம். அடிக்கடி சரிபார்க்கிறோம். எங்களிடமிருந்து எதுவும் களவு போகவில்லை'' என்றார்.

நேர்மை ஏலம் விடப்பட்டிருக்கிறதா என்பதை அரசுதான் உடனே தெளிவுபடுத்தியாக வேண்டும்!

-மௌலி

பதினெட்டு ஆண்டுகள் கடந்து விட்ட பின்பும் இன்றும் விவாதப் பொருளாக இருக்கும் 'பாபர் மசூதி இடிப்பு' சம்பவத்தை மையமாகக் கொண்டு படம் இயக்கி வருகிறார் ஏ.எம்.ஆர். ரமேஷ். இவர் ஏற்கெனவே ராஜீவ் காந்தி படுகொலை சம்பவத்தை மையமாக வைத்து 'குப்பி'யை இயக்கியவர்.

**உங்களின் 'குப்பி' தோல்வியடைந்த பின்பும் அடுத்த படத்தை இயக்கும் தைரியம் எப்படி வந்தது?**

''தைரியமும் தன்னம்பிக்கையும் தான் ஒருவனை சாதனையாளனாக்கும். அதிலும் இந்த சினிமாத் துறையில் தோல்விகள் சர்வ சாதாரணம். பெரிய பெரிய இயக்குனர்களே தோல்வியைச் சந்தித்துள்ளனர். தவிர, குப்பி கன்னடத்தில் பெரும் வெற்றி பெற்ற படம். தமிழில்தான் வெற்றி பெறவில்லை. ஆனால், பல்வேறு பத்திரிகைகளும், மீடியாவும் பாராட்டிய படம். அந்த தைரியத்தில்தான் 'போலீஸ் குவார்ட்டர்ஸ்' கொடுக்க வந்திருக்கிறேன். இது நிச்சயம் வெற்றி பெறும் என நம்புகிறேன்.''

**தீவிரவாதமும், வன்முறையும் இருமுனைக் கத்தி போன்றது**

**போலீஸ் குவார்ட்டர்ஸ் பற்றிச் சொல்லுங்களேன்?**

''எந்த ஒரு இழப்பிலும் கண்ணுக்குத் தெரியாத அல்லது மறந்துபோன சோகம் இருக்கும். கடந்த 1992ம் ஆண்டு அயோத்தியில் பாபர் மசூதி இடிப்பையொட்டி பெங்களூரில் நடக்கும் கலவரத்தில் ஒருவன் காணாமல் போகிறான். அவன் என்ன ஆனான், ஏன் தொலைந்து போனான் என்று திரைக்கதை நகர்கிறது. படத்தில் நிறைய சம்பவங்கள் காவலர் குடியிருப்பில் நடக்கின்றன. ஹீரோ புது முகம் அலிஷ். முதல் படம் என்று சொல்ல முடியாத அளவுக்கு பிரமாதமா பண்ணியிருக்கார். மென்மையான குல்மொஹர் மலரைப் போல் ஹீரோயின் ஸ்ருதி. கன்னடத்தில் ஹாட்ரிக் அடித்தவர்.''

**உங்களைப் போன்ற திரைப்படக் கல்லூரி மாணவர்கள் உண்மைச் சம்பவத்தை மட்டும்தான் படமாக எடுப்பீர்களா?**

''எந்த ஒரு பயங்கரமான சம்பவத்துக்குப் பின்னாலும் சொல்லப்படாத விஷயங்கள் சில இருக்கும். அந்த சொல்லப்படாத விஷயங்களை சுவாரஸ்யமாகச் சொல்வது தான் என் பணி. புலனாய்வுப் பத்திரிக்கைகளில் 'இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிஸம்' செய்வது போல நானும் என்னுடைய படங்களுக்குப் புலனாய்வு செய்து உண்மைச் சம்பவங்களைத் தருகிறேன். நடந்து முடிந்த விஷயங்களுக்குத் தீர்ப்பு சொல்லும் பணி என்னுடையதல்ல. தீர்ப்பை பார்வையாளனின் முடிவுக்கே விட்டுவிடுகிறேன்.''

**உண்மைச் சம்பவங்களைச் சொல்கிறேன் என்று நிறைய பேர் வன்முறைக்கு சப்போர்ட் செய்கிறார்களே?**

''அது தவறு. போராட்டம் என்பது வேறு. தீவிரவாதம் என்பது வேறு. தீவிரவாதமும், வன்முறையும் இரு முனைக் கத்தி போன்றது. பயன்படுத்தியவனையே திருப்பித் தாக்கும். குப்பியில் இதை அழுத்தமாகப் பதிவு செய்து இருந்தேன். போலீஸ் குவார்ட்டர்ஸிலும் இதைச் சொல்லப் போகிறேன். எல்லா நாட்டுக்கும் இறையாண்மை என்று ஒன்று இருக்கிறது. அந்த இறையாண்மையை மீறாமல்தான் போராட்டங்கள் இருக்க வேண்டும்.''

**கர்நாடகத்தவரான நீங்கள் காவிரிப் பிரச்னையை வைத்துப் படம் இயக்குவீர்களா?**

''காவிரிப் பிரச்னை விவசாயிகளின் பிரச்னை. இரண்டு மாநில விவசாயிகள் உட்கார்ந்து பேசினால் இந்தப் பிரச்னை என்றோ முடிவுக்கு வந்திருக்கும். ஒரு விவசாயியின் பிரச்னை இன்னொரு விவசாயிக்குத்தான் புரியும். காவிரிப் பிரச்னையில் அரசியல்வாதிகள் தலையீடு தேவையற்றது. எதிர்காலத்தில் காவிரிப் பிரச்னையைப் பற்றி நான் படம் இயக்கினால், விவசாயிகளின் பார்வையில்தான் அந்தப் படம் அமையும்.''

**வேற என்ன ஐடியா?**

''வீரப்பன் சம்பவத்தை வைத்து ஒரு படமெடுக்கும் ஐடியா இருக்கிறது. தவிர, ராஜீவ்காந்தி படுகொலையில் அவருடன் சேர்ந்து சிலரும் பலியானார்கள் அல்லவா? அவர்களைப் பின்னணியில் வைத்தும் ஒரு கதையைத் தயார் செய்து வருகிறேன். சரியான தருணம் அமையும்போது வெண் திரையில் ரசிகர்களைச் சந்திப்பேன்.''

**- ராகவ்குமார்**

ஏ.எம்.ஆர்.ரமேஷ்



# போலீஸ் குவார்ட்டர்ஸில் குல்மொஹர்!

வட்டமேஜை

**ம**துரை என்றாலே அழகிரி என்று பேசப்படும் அளவில் அவரை நேரடியாகப் பேட்டி கண்டு (கேள்வியும் - பதிலும் அதற்கான கமெண்டும்) கல்கி வாசகர்களைக் கலகலக்க வைத்து விட்டீர்கள்.

**- வே.ஈஸ்வரன், இராஜபாளையம்**

**கா**ங்கிரஸின் தற்போதைய நிலைமையை எவ்வளவு பக்கங்கள் எழுதினாலும், 'காங்கிரஸ் அன்று, இன்று' கார்ட்டூன் கொடுத்த தாக்கம் அதில் இருக்காது. அவ்வளவு சிறப்பாக, உள்ளதை உள்ளபடி விளக்கிவிட்டது.

**- எஸ்.ராமசாமி, ஈரோடு**

**கா**ய்க்காத தென்னைமரம்' கூட கசப்பினில் இனிப்பான கவிதையாக இருந்தது, 'காய்ச்சிடுச்சு அப்பாவால்' என்ற இறுதி வரியில்.

**- சி.என்.ரமாதேவி, சென்னை - 83**

''**லீ**லாவதி படுகொலை ஆன அந்த நிமிடமே, என் இதயம் நெருப்பில் விழ்ந்து போனது!'' - பன்னிரண்டு ஆண்டுகள் ஓடிய பின்பும் மறக்க முடியாமல் தவித்துக் கொண்டிருக்கும் லீலாவதியின் கணவர் குப்புசாமிக்கு ஆறுதல் சொல்ல வார்த்தைகளே இல்லை.

**- என்.பாலகிருஷ்ணன், மதுரை**

# கச்சிதமான பேட்டி

வட்டமேஜை

**மு**.க.அழகிரியின் மறுமுகம் ஜாலி என்றால், தங்களது கமெண்ட் படு ஜாலி!

**- சாத்தூர் சபாபதி, திருச்சி**

'**க**ஞ்சிவரம் படத்துக்கு விருது கிடைத்தால் சிறந்த படத்தில் நானும் பணியாற்றியதற்காக கிடைத்த விருதாகவே இருக்கும்' எனக் கூறும் நடிகர் பிரகாஷ்ராஜ் பேட்டி கச்சிதம்!

**- ஏ.பி.எஸ்.ரவீந்திரன், வள்ளியூர்**

**கா**ய்க்காத தென்னை மரம் கவிதையில் கடைசியில் செவ்விள நீரைக் கண்டதான உவமானம் உச் கொட்ட வைத்தது.

**-வானவில் மூர்த்தி, கடலூர்**

**ம**துரை மண்ணின் மணத்தையும், அழகையும் சிறப்பையும் மைந்தர்களையும் சிறப்பாகக் கூறி 'மதுரை மாவட்ட ஸ்பெஷல்' என்பதற்கு இலக்கணம் வகுத்து விட்டார் முனைவர் கு.ஞானசம்பந்தன்.

**- எம்.இளங்கோவன், லால்குடி**

**பூ**ங்கோதைக்கு ஏன் பூங்கொத்து? - கட்டுரை பொது மக்களின் சந்தேகக் குமுறல்களை அப்படியே எதிரொலித்து

விட்டது!

- கே.கஸ்தூரி, வேலூர்

**சி**ல தேவதைகள் இறப்புக்குப் பின்பும் வாழ்கிறார்கள் என்பதை இயல்பாகப் புரிய வைத்தது மலர் மதியின் 'நண்பனின் மனைவி' சிறுகதை.

- **ஆர்.பி.ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்**

**ர**மண மகரிஷி வாழ்ந்த வீடும், எம்.எஸ். பிறந்த வீடும் இருக்கும் அவல நிலையைப் படிக்கும்போதே மனசு துக்கமடைந்தது! அரசு மேற்படி வீடு களைப் பராமரித்துப் போற்றலாமே!

**-சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி**

கல்கி (29.3.09) இதழ் அமரர் கல்கி எழுதிய 'போங்கள் பகவான் பார்த்துக் கொள்வார்!' தலைப்பிட்ட கட்டுரையில், இ.கிருஷ்ணையர் படத்துக்குப் பதிலாக வி.ஆர்.கிருஷ்ணையர் படம் தவறுதலாக இடம் பெற்றுவிட்டது. தவறுக்கு வருந்துகிறோம். இதோ இ.கிருஷ்ணையர் படம்.

(ஆர்)



'**ப**ணிவு - அடுத்தவர்களைப் பணிய வைக்கும்' என்பதை ஏவி.எம். சரவணனிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய பாடமாக 'தராசு' சொன்ன பதில் கனகச்சிதம்!

- **வே.ந.கதிர்வேல், வேலூர்**

**க**ல்கி 22.3.2009 இதழில் 'அருள்வாக்கு' விடுபட்டதேன்? காஞ்சி காமகோடி சுவாமிகளின் அருளார்ந்த ஆசிப் பார்வையும், அருள்வாக்கும், தற்சமயம் கல்கி வாசகர்களுக்குத் தேவை. புதுமை சேர்க்கும்போது, பழைமையை மறந்துவிடாதீர்கள்.

- **எம்.சண்முகம், சென்னை - 83**



* முனாஃப்

# மாறுங்கள் முனாஃப்!

● ஐ.பி.எல். சர்ச்சைகளுக்கு இடையே இந்திய அணி நியூசிலாந்தை பத்து விக்கெட் வித்தியாசத்தில் வெற்றி கண்டது, போகிற போக்கில் நடந்துவிட்ட ஒரு விஷயமாகவே படுகிறது. முதல் நாளன்று வெட்டோரியும் ரைடரும் தலா செஞ்சுரி அடித்தபோதும் இந்திய அணியினர் சகஜமாகவே இருந்தனர். அவர்களுக்கு வெளிநாட்டில் வெற்றி பெறுவது என்பது தினமும் காலையில் எழுந்து காப்பி குடிப்பது போல இயல்பாகிவிட்டது.

● இந்திய அணியில் ராணுவ ஒழுங்கு தென்படுகிறது. அணிக்காகப் பங்காற்றுவதில் எல்லோரும் மனமுவந்து ஈடுபாடு காட்டுகிறார்கள். அவரவர் திறமைக்கேற்ப உரிய மரியாதை தரப்படுகிறது. திறமை இருப்பவர்கள் எவரும் அலட்சியம் செய்யப்படுவதில்லை. கயலாபம் கருதி யாரும் யாரையும் பலிகடா ஆக்குவது கிடையாது. அணித் தேர்வில் குழப்பம் இல்லாது இருப்பதே இதற்குச் சான்று. மும்பை அரசியல், தேர்வுக் குழுவில் தலையிடாதது பெரிய மாறுதல். பி.சி.சி.ஐ. போன்ற பல்வேறு முரண்பாடுகள் கொண்ட ஓர் அமைப்பில் இப்படியோர் ஒழுங்கு.

● சச்சின், ஷேவாக், கம்பீர், தோனி, ஜாகிர்கான், இஷாந்த் சர்மா என்று எல்லோரையும் பற்றிப் பேசித் தீர்த்துவிட்டோம். கட்டாயம் பேசப்பட வேண்டியவர் முனாஃப் பட்டேல். பொதுவாக எந்த அணியிலும் மூன்றாவது பந்து வீச்சாளரிடமிருந்துதான் சிக்கல் தொடங்கும். அவர் கையாலாகாதவராக இருந்துவிட்டால், அந்தத் தெம்பில் எல்லா பௌலர்களையும் துணிச்சலாக எதிர்கொள்ளும் மனவலிமையை பேட்டிங் டீம் பெற்றுவிடும். முனாஃப் அப்படியொரு வாய்ப்பை எதிரணியினருக்கு வழங்கி விடவில்லை.

சீ.ஹி.கண்ணன்

* இஷாந்த் சர்மா



# திருத்தம்



★ பொ. மோகன்

மதுரை மாவட்ட ஸ்பெஷல்-2ல் என்னு டைய பேட்டியை 'மதுரையை ஏய்த்த திருவாரூர்' என்ற தலைப்பில் வெளியிட்டிருக்கிறீர்கள். எனது பேட்டியில் **'எய்ம்ஸ் மருத்துவமனை திருவாரூருக்குப் போய்விட்டது'** என்று நான் கூறியதாக அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. எய்ம்ஸ் மருத்துவமனை தமிழ்நாட்டில் **இதுவரை அனுமதிக்கப்படவில்லை** என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழக முதல்வர் கருணாநிதி, பிரதமருக்கு 2007ம் ஆண்டு எழுதிய கடிதத்தில் தமிழ்நாட்டில், மதுரை உள்ளிட்ட நான்கு நகரங்களில் மத்தியப் பல்கலைக்கழகங்கள் அமைக்கப்பட வேண்டும் என்பதை வலியுறுத்தியிருந்தார். முதலமைச்சர் கடிதத்தில் கூறியிருந்த அடிப்படையில் மதுரையில் மத்தியப் பல்கலைக்கழகம் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அமைக்கப்படவில்லை. அவரது கடிதத்தில் குறிப்பிடாத மற்றொரு ஊருக்கு மத்திய பல்கலைக்கழகம் கொண்டு செல்லப்பட்டுள்ளது.

முதலமைச்சரே மதுரைக்குப் பல்கலைக்கழகம் வேண்டும் என்று எழுதியும், மதுரை தவிர்க்கப்பட்டிருப்பதால் மதுரையில் மத்தியப் பல்கலைக்கழகம் அமைவது கைவிடப்பட்டிருக் கிறது என்றுதான் நான் கூறினேன். அந்த வகையிலும் மதுரை ஏமாற்றப்பட்டுள்ளது. இந்தத் தன்மையில்தான் எனது பேட்டியில் தெரிவித்திருந்தேன்.

- பொ.மோகன், நாடாளுமன்ற உறுப்பினர்.

*['திருவாரூர்' என்ற சொல்லை எம்.பி. குறிப்பிடாவிட்டாலும், திருவாரூரில் மத்திய பல்கலைக் கழகம் வரவிருக்கும் செய்தி நாளிதழ்களில் ஏற்கெனவே பிரசுரமாகியுள்ளது. - ஆர்.]*

முதல் டெஸ்டில் ஜாகீர், இஷாந்த் உடன் அழகாக இணைந்து பந்து வீசினார். குறிப் பாக டெஸ்டின் இறுதி நாளன்று அவர் மெக்கலமை பலவிதங்களிலும் தடுமாற வைத்தார். கலபமாகத் தனக்குக் கிடைக்க வேண்டிய எல்.பி. டபிள்யூ. விக் கெட்டை அம் பயர் தர மறுத்த போது அதைப் புன்னகை யோடு எதிர் கொண்டார். முனாஃபிடம் திறமை இருக்கிறது. தம்மை அவர் ஒரு மூன்றாவது மாற்றுப் பந்து வீச்சாளராகக் கருதாமல் அதிரடி வீரராகக் கருதவேண் டும். முக்கியமாக, அவரது தளர்ந்த உடல் மொழியையும் மாற்றிக் கொள்ள வேண் டும்.



★ சச்சின்

● நியூசிலாந்து டெஸ்ட் தொடரைப் பற்றி இனி கவலை இல்லை. ஐ.பி.எல். சர்ச்சைகள் எல்லாமே அது தொடங்கும் நாளில் தீர்த்துப் போய்விடும். அடுத்து உடனே 20-20 உலகக் கோப்பை. பிறகு மேற்கிந்திய அணியுடனான ஒருநாள் போட்டிகள், பிறகு ஜிம்பாப்வே டூர் என்று இந்திய அணி காலில் சக்கரத்தைக் கட்டிக்கொண்டு ஓட வேண்டியிருக்கும். டீ.வி. தொடர்கள் போல இனி தினசரி கிரிக்கெட் மேட்ச்கள் நம்மைத் துரத்தப் போகின்றன. ●





# டேக் இட் ஈஸி!



அமெரிக்காவில் தேர்வுகள் எப்படி நடக்கின்றன? இங்கு மாதிரி அங்கும் பயமுறுத்தும் எக்ஸாம் ஃபீவர் உண்டா என்பதை அறிய அங்குள்ள ஒரு இந்திய மாணவருக்கு ஈமெயில் தட்டினோம். அவரது உற்சாக பதில் மெயில்...

"அமெரிக்காவைப் பொறுத்த வரை பள்ளிக்கூடம், கல்லூரி, பாடம், தேர்வு எல்லாமே 'டேக் இட் ஈஸி' பாலிஸிதான்.

எக்ஸாம் ஃபீவர், எக்ஸாம் ஃபியர் எல்லாம் இங்கே அறவே பார்க்க முடியாது. ஐந்து மாணவர்களுக்கு ஒரு ஆசிரியர் என்ற விகிதத்தில்தான் இங்கு பாடமே நடக்கும். இந்தியாவிலிருந்து வரும் மாணவனுக்கு இங்குள்ள கல்வி, தேர்வு முறை எல்லாமே திகைப்பாகவும், தித்திப்பாகவும் இருக்கும்.

ஒரு புத்தகத்தில் எத்தனை சாப்டர்களிலிருந்து தேர்வுகளுக்குக் கேள்விகள் கேட்கப்படும் என முன்கூட்டியே ஆசிரியர்கள் தெரிவித்து விடுவார்கள். அதனால் சமர்த்தாக அந்த சாப்டர்களை மட்டும் பார்த்துக் கொண்டால் போதும். சூப்பரான க்ரேடுகளை ஈஸியாக அள்ளிடலாம். அதே போல கேள்வித் தாளில் கேட்கப்படும் கேள்விகளில் பாதிக்குப் பாதி மல்டிபின் சாய்ஸான கேள்விகளாகவே அமையும். சில சப்ஜெக்ட்களில் ஒரே ஒரு எஸ்ஸே எழுதச் சொல்லி கேள்வி வரும். அது எந்தத் தலைப்பில் வரும் என்பதையும் தேர்வு நடப்பதற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பே டிஸ்கஸ் செய்து விடுவார்கள். இந்தியாவில் முப்பத்தைந்து மார்க் எடுத்தாலே பாஸ். இங்கே அறுபதிலிருந்து அறுபத்தைந்து மார்க்குகள் எடுத்தால்தான் பாஸ். ஆனாலும் இந்த இந்தக் கேள்விகள்தான் வரப்போகின்றன என முன்கூட்டியே தெரிந்து விடுவதால், தேர்ச்சி விகிதம் இங்கே ரொம்ப அதிகம்.

இந்தியாவில் புத்தகப் புழுவாக இருந்தால் மட்டுமே புத்திசாலி என ஒப்புக் கொள்ளப்படுவார்கள். இங்கோ மாணவர்களின் தனித்திறமைகளை வெளியில் கொண்டு வரும் ஒரு பெரிய களமாகப் பள்ளிப் படிப்பும், கல்லூரிப் படிப்பும் பார்க்கப்படுகின்றன."

என்ன... அமெரிக்கக் கல்வி முறையை நினைத்து ஏக்கப் பெருமூச்சு வருகிறதா? 'டேக் இட் ஈஸி'. நமது அடுத்த தலைமுறைக்காவது இந்தக் கல்வி முறை வருவதற்கு உங்களுக்குப் பிடிச்ச சாமிகிட்ட அப்ளிகேஷன் போட்டு வைங்க!

– நளினி சம்பத்குமார்



# கம்பிகளுக்குப் பின்னால்...

''எங்களுக்குப் பாடம் சொல்லித் தர வரும் ஆசிரியர்களின் அர்ப்பணிப்பை மறக்கவே மாட்டோம். அவங்க எங்ககிட்ட காட்டுற அக்கறைக்காகவே நல்லா படிச்சு பாஸ் ஆகணும்னு மனசுல வைராக்கியமா இருக்கோம். இப்ப பத்தாவது எக்ஸாம் எழுதறேன். அடுத்து ப்ளஸ்டு, டிகிரின்னு முடிச்சு வெளியே போறப்ப ஒரு பட்டதாரியா போகணும்னு இருக்கேன்'' என்கிறார் ஒருவர்.

''பட்டதாரி ஆகறது ஒரு பக்கம் இருக்கட்டும். இந்தப் படிப்பு மன உளைச்சல், விரக்தியில் இருந்து மீள ஒரு படகா இருக்கு'' என்கிறார் வணங்காமுடி.



* முருகேசன்

இவர்கள் திருச்சி மத்தியச் சிறையிலுள்ள கைதிகள். கம்பிகளை மட்டும் எண்ணிக் கொண்டிருக்காமல், வாழ்வின் அடுத்த தளத்துக்குச் செல்ல தங்களைத் தயார்ப்படுத்திக் கொண்டிருப்பவர்கள். இந்த ஆண்டு பத்தாம் வகுப்புத் தேர்வு எழுதும் எட்டு லட்சத்து நாற்பதாயிரம் மாணவர்களில் இந்த வெள்ளைச் சீருடை மாணவர்களும் அடக்கம்.

தமிழக மத்தியச் சிறைச்சாலைகளில் கல்வி பயின்று வரும் நூற்று முப்பத்தேழு பேர் சந்திக்கும் முதல் பத்தாம் வகுப்பு பொதுத் தேர்வு இது. தமிழ், ஆங்கிலம், கணிதம், அறிவியல், சமூக அறிவியல் என ஐந்து பாடங்கள். ஒவ்வொரு பாடத்துக்கும் ஒரு ஆசிரியர். ஆங்கிலம் மட்டும் தினசரி வகுப்பு. மற்ற பாடங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு நாள் வகுப்பு. சனி, ஞாயிறு விடுமுறை என பக்காவாக இந்த மாணவர்களைத் தயார்ப்படுத்தி தேர்வு வரை அழைத்து வந்துள்ளார்கள்.

''சிறைச்சாலை தவறு செய்தவர்களுக்குத் தண்டனை தரும் இடமாக மட்டுமில்லாமல் அவர்களை நல்வழிப்படுத்தி குணம், அறிவுத்திறன் ஆகியவற்றிலும் உயர்த்தி புதிய மனிதர்களாக வெளியே அனுப்ப வேண்டும் என்ற எண்ணத்தில் உருவாக்கப்பட்ட திட்டம் இது. தமிழக சிறைத் துறை தலைமை இயக்குனர் (டி.ஜி.பி.) மேற்கொண்ட சீரிய முயற்சிக்கு வெற்றி கிடைத்துள்ளது'' என்கிறார் திருச்சி மத்தியச் சிறை கண்காணிப்பாளர் முருகேசன்.

''இந்தத் தேர்வு எங்கள் வாழ்வில் ஒளியேற்ற உதவும் என்று நம்புகிறோம்'' என்கிறார்கள் இந்த வெள்ளைச் சீருடை மாணவர்கள்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# குளறுபடி மகன்!

சர்ச்சையில் சிக்குவது வருண் காந்திக்குப் புதிதல்ல. சில காலம் முன் இந்துக்கள் கூடியிருந்த கூட்டம் ஒன்றில் பேசுவதற்கு முன்பாக, அங்கே இருந்த ஒரு மூத்த சீக்கியரை வெளியே சென்று விடும்படி கடுமையாகப் பேசினார். ''அந்த சீக்கியரின் வயதுக்குக் கூட வருண் மரியாதை தரவில்லையே!'' என்று கட்சிக்காரர்களே கருத்து சொன்னார்கள்.

எதிர்காலத்தில் ராகுல், பிரியங்காவை எதிர்கொள்ள, வருணைத் தயார்ப்படுத்தி வந்தது பா.ஜ.க. அதன் தேசியச் செயற்குழு உறுப்பினராக இருக்கும் வருணை, இந்தத் தேர்தலில் உ.பி.யிலும், இதர இந்தி பேசும் மாநிலங்களிலும் ஸ்டார் பிரசாரகராகப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டுள்ளது.

அம்மா மேனகா கூட முதலில் தம்முடைய ஒரே மகனை அரசியலின் நிழல் படாமல்தான் வளர்த்தார். சோனியா காந்தியின் குழந்தைகள் பிரியங்காவும், ராகுலும் டெல்லியில் படித்தபோது, மேனகா காந்தி வருணை ஆந்திராவின் ரிஷி வேலி பள்ளிக்கூடத்தில் சேர்த்தார். பள்ளிப் படிப்பை முடித்தவுடன், இங்கிலாந்து சென்று, லண்டன் ஸ்கூல் ஆஃப் எகனாமிக்ஸில் சேர்ந்து சட்டமும், பொருளாதாரமும் படித்துவிட்டு, லண்டனிலேயே 'ஸ்கூல் ஆஃப் ஓரியன்டல் அண்ட் ஆஃப்ரிகன் ஸ்டடீ'சில் பட்ட மேற்படிப்பை முடித்தார். வருணுக்குக் கவிதைகள் எழுதுவது பொழுதுபோக்கு. அவரது ஆங்கிலக் கவிதைகளின் தொகுப்பு, 'தி அதர்னெஸ் ஆஃப் செல்ஃப்' என்ற தலைப்பில் புத்தகமாக வெளியானது.

படிப்பு முடிந்து இந்தியா திரும்பிய வருணுக்கு இருபத்தைந்து வயது நிரம்பாததால், 2004 பொதுத் தேர்தலில் போட்டியிடவில்லை. இப்போது, மகனின் பாராளுமன்றப் பிரவேசத்துக்காக, ஆறுமுறை தாம் வெற்றிபெற்ற பிலிபிட் (உ.பி.) தொகுதியை விட்டுக் கொடுத்துள்ளார் மேனகா காந்தி. அவோன்லா (Aonla) தொகுதிக்கு மாறியிருக்கிறார். அம்மா அவோன்லா; மகன் அனலோ அனல்!

- மௌலி

டைனோசர் உலகம்!

சின்னச் சின்ன ஆசை...

ஜோக் போட்டி!

- கவிதைகள்
- கதைகள்
- பரிசுப் போட்டி

# கோகுலம்

ஏப்ரல் 2009 விலை ரூ.8/- குழந்தைகளின் குதூகலம்!

